[ஸ்வாபிமத நித்ய நிரவத்யாநுரூபஸ்வரூபரூப குண விபவைச்வர்ய சீலாத்யநவதிகாதிசயாஸங்க்யேய கல்யாண குணகண ஸ்ரீவல்லப ! ] என்று.

பெரியபிராட்டியாரைப் பற்றின முதல் சூர்ணையில் இட்டிருக்கிற விசேஷணமே இங்கும் இடப்பட்டிருக்கிறது. அநுபவ ரஸிகர்களின் ஆதராதிசயம் பேசுவிக்கிற பேச்சாகையாலே இங்குப் புநருக்தி தோஷம் சங்கிக்க இடமில்லை. இங்கே ஆச்சான் பிள்ளையின் ஸ்ரீஸூக்தி காண்மின் ; - "ப்ரதம சூர்ணையிலும் இக்குணங்கள் உக்தமாயிருக்கத் திரியட்டும் சொல்லுகிறவிது புநருக்தமன்றோ வென்னில் ; இவர் தாம் பிறர்க்கு உபதேசிக்கிறாரன்றியிலே அநுபவிக்கிறாராய் அத்தாலே வந்த ஆதராதிசயம் சொல்லுவிக்கச் சொல்லுகிறாராகையாலே புநருக்தி தோஷமில்லை. அதவா, அங்கு ஶரண்யதைக்கு உறுப்பாகவருளிச் செய்தார் ; இங்கு ப்ராப்யத்துக்குறுப்பாக வருளிச் செய்கிறார்." என்று.

ஸ்வாபிமதங்களாயும் நித்யநிரவத்யங்களாயும் அநுரூபங்களாயுமிருக்கிற ஸ்வரூப ரூப....... கல்யாணகுண கணங்களையுடையளான ஸ்ரீ மஹாலக்ஷ்மிக்கு வல்லபனானவனே ! என்றபடி. பகவந்நாராயணாபிமதேத்யாதி சூர்ணையில் விவரித்தபடி கண்டுகொள்வது. ஸ்ரீ வல்லப!—ஸ்ரீக்கு வல்லபனானவனே ! என்றும், ஸ்ரீயை வல்லபையாக வுடையவனே ! என்றும் இருவகையுங் கொள்ளக்கடவது. முந்தின பொருளில் * திருவுக்குந் திருவாகிய செல்வன் என்றதாகும். பிந்தின பொருளில் அவள் சொன்ன சொல்லை மறுக்கமாட்டாத படி அவளுக்கு விதேயனாயிருப்பவனென்றதாகும்.

ஏவம்பூத பூமிநீளாநாயக ! — கீழே ஸ்வாபிமத என்று தொடங்கி கல்யாணகுணகண என்றவளவுஞ் சொன்னதை (ஏவம் பூத) என்று அதிதேசிக்கிறபடி. பெரிய பிராட்டியார்க்குச் சொல்லும் பெருமைகளெல்லாம் பூமிதேவிக்கும் நீளாதேவிக்கும் ஸமானமென்றவாறு. * குழற் கோவலர் மடப்பாவையும் மண்மகளும் திருவின் நிழல் போல்வனர் * (திருவிருத்தம்) என்ற நம்மாழ்வார் பாசுரங் காண்க.

இனி கீழ்ச்சொன்ன சேர்த்திகளெல்லாம் காட்டிலெரித்த நிலாவாகாமே நித்யபோக்தாக்கள் அமைந்திருக்கும்படி சொல்லுகிறது மேல்

(மூலம்) ஸ்வச்சந்தானுவர்த்தி ஸ்வரூபஸ்திதி ப்ரவ்ருத்தி பேத சேஷ சேஷைககரதிரூப நித்ய நிரவத்ய நிரதிசய ஜ்ஞாநக்ரியைச்வர்யாத்யநந்த குணகண சேஷ சேஷாசந கருட ப்ரமுக நாநாவிதானந்த பரிஜந பரிசாரிகா பரிசரித சரணயுகல !

[ஸ்வச்சந்தா நுவர்த்தி ஸ்வரூபஸ்திதி ப்ரவ்ருத்தி பேதா சேஷ சேஷைகரதிரூப நித்ய நிரவத்ய நிரதிசய ஜ்ஞாநக்ரியை ச்வர்யா த்யநந்த குணகண சேஷ சேஷாசந கருட ப்ரமுக நாநாவிதா நந்த பரிஜந பரிசாரிகா பரிசரித சரணயுகல !]

திருவனந்தாழ்வான் ஸேநாபதியாழ்வான் பெரிய திருவடி முதலான அபரிமித பரிஜனங்களும் பரிசாரிகைகளும் திருவடிவாரத்திலே நித்யகைங்கரியம் பண்ணும்படியாக வுள்ளவனே ! என்கிறார். அந்த நித்யஸூரிகள்

எப்படிப்பட்டவர்களென்னில்; ஸ்வச்சந்தாநுவர்த்தி ஸ்வரூப ஸ்திதி ப்ரவ்ருத்திபேத – தன்னுடைய திருவுள்ளத்தை யநுஸரித்த ஸ்வரூபஸ்திதி ப்ரவ்ருத்திகளை யுடையவர்களாயும், அசேஷ சேஷதைகரதி ரூப - ஸகலவித கைங்கர்யங்களையும் செய்ய ஆசைப்பட்டிருப்பதையே வடிவாக வுடையவர்களாயும், நித்ய நிரவத்ய நிரதிசய ஜ்ஞாநக்ரியா ஐச்வர்யாதி அநந்த (கல்யாண) குணகண — எக்காலும் வழுவற்று ஒப்புயர்வற்றவையான ஜ்ஞானம் வியாபாரம் நியமனம் முதலான அனந்தகல்யாணகுண ஸமூஹங்களை யுடையவர்களாயுமிருப்பர். நித்ய நிரவத்ய என்பதை நேராக சேஷ சேஷாசநாதிகளுக்கே விசேஷண மாக்கி யுரைப்பது முண்டு. அப்போது சேஷ சேஷாசநாதிகளுக்கு நான்கு விசேஷணங்களிட்டதாக ஆகிறது. ஸ்வாதீந ஸ்வார்த்த கைங்கரியரூ செய்கையாகிற அவத்யமில்லாதவர்கள் என்று கருத்து. நித்ய நிரவத்யத்வத்தை ஜ்ஞாநாதிகளுக்கு விசேஷணமாக்கினாலும் இந்தக் கருத்துதேறும். அடிமைக்குறுப்பான அஸங்குசித ஜ்ஞானமென்ன, க்ரியா-அந்த ஜ்ஞானத்துக்கேற்ற செய்கையென்ன, ஐச்வர்ய– பிறரை நியமிக்கும் அதிகாரமென்ன இவை முதலான குணங்களை யுடையவர்களென்கை.

சேஷாசநரென்று ஸேனைமுதலியார்க்குத் திருநாமம். *த்வதீய புக்தோஜ்ஜித சேஷ போஜிநா ......... ப்ரியேண ஸேநாபதிநா * என்ற ஆளவந்தார் ஸ்ரீஸூக்தி காண்க. பரிசாரிகா—அநுக்ரஹா, விமலா, காந்தி, வாருணீ, ஸுகீர்த்தி, ருத்ரா, ஸுத்ரவதீ முதலானவரைப் பரிசாரிகைகளென்கிறது. ஸ்ரீரங்கராஜ ஸ்தவத்தில் * லீலா லதா க்ருபாணீ * முகுளிதநளிநா : * என்ற ச்லோகங்களிலுங் காண்க. * மதிமுகமடந்தையர் * என்றார் ஆழ்வாரும்.

இனி இப்படிப்பட்ட எம்பெருமானுடைய இருப்பிடத்தைச் சொல்லுகிறது

(மூலம்) பரமயோகி வாங்மநஸாபரிச்சேத்ய ஸ்வரூபஸ்வபாவ ஸ்வாபிமத விவித விசித்ராநந்த போக்ய போகோபகரண போகஸ்தாந ஸம்ருத்த அநந்தாச்சர்யாநந்த மஹாவிபவாநந்த பரிமாண நித்ய நிரவத்ய நிரதிசய வைகுண்டநாத!

[பரமயோகி வாங்மநஸாபரிச்சேத்ய ஸ்வரூபஸ்வபாவ ஸ்வாபிமத விவித விசித்ராநந்த போக்ய போகோபகரண போகஸ்தாந ஸம்ருத்த அநந்தாச்சர்யாநந்த மஹாவிபவாநந்த பரிமாண நித்ய நிரவத்ய நிரதிசய வைகுண்ட நாத!] என்று.

பரமயோகி என்று தொடங்கி வைகுண்டநாத என்னுமளவும் ஏகவாக்யமாகக் கொள்வதே ஸர்வாசார்ய ஸம்மதம். பரமயோகி வாங்மநஸாபரிச்சேத்ய ஸ்வரூப. ஸ்வபாவ என்கிற வரையில் தனி வாக்யமாக்கி இதைத் தனியே ஒரு ஸம்போதநமாகக் கொண்டு உரைப்பாருமுளர் என்று தேசிக பாஷ்யத்தினால் தெரிய வருகின்றது. ச்ருதப்ரகாசிகாசார்யர் அங்ஙனே திருவுள்ளம் பற்றியிருப்பதாக அவருடைய வியாக்கியானத்தினால் தெரிகின்றது. அங்ஙனே உரைத்தருளின அவரும் உடனே, "பரமயோகித்வாதிகம் தத்விசேஷணம் வா; ததா ஸ்ரீவைகுண்ட [illegible]" என்றருளிச் செய்திருக்கையாலே முழுவதையும் ஏகவாக்யமாகக் கொள்வதே சிறக்கும்.

பரமயோகிவாங்மநஸாபரிச்சேத்ய ஸ்வரூபஸ்வபாவமாயும், ஸ்வாபிமத விவிதவிசித்ராநந்த போக்ய போகோபகரண போகஸ்தாந ஸம்ருத்தமாயும், அநந்தாச்சர்ய-

மாயும் ஸுநஜ ஸஹஸ்ரவிஹவமாயும் ஸுநஜவரிசாணமாயும் நித்யமாயும் நிரவத்யமாயும் (அல்லது நித்ய நிரவத்ய மாயும்) நிரதிசயமாயுமிருக்கிற வைகுண்ட லோகத்திற்கு நாதனானவனே ! என்று கொள்க. மேலே ஸ்ரீவைகுண்ட கத்யத்தில் * திவ்ய புருஷை: மஹாத்மபிராபூரிதே, தேஷா மபி இயத்பரிமாணம் இயதைச்வர்யம் ஈத்ருச ஸ்வபாவமிதி பரிச்சேத்துமயோக்யே * என்றருளிச் செய்வதைக்கொண்டு இங்கு முதல்விசேஷணத்தை விவரிப்பது. பரப்ரஹ்ம ஸ்வரூபத்தை ஸாக்ஷாத் கரித்தவர்களாய் ச்வே தத்வீப வாஸிகளான பரமயோகிகளாலும் ஸ்ரீவைகுண் டத்தினுடைய ஸ்வரூபமும் ஸ்வபாவமும் வாக்கினாலும் நெஞ்சினாலும் பரிச்சேதிக்க வொண்ணாதது. சுத்த ஸத் வமயமாயிருப்பது ஸ்வரூபம். போக்யதம மாயிருப்பது ஸ்வபாவம். இவ்விரண்டும் பரமயோகிகளுக்கும் பாசுர மிட்டுச் சொல்லவொண்ணாதது, நெஞ்சால் நினைப்பரிது.

[ஸ்வாபிமதே த்யாதி.] தனக்கு அபிமதங்களாயும் பலவகைப்பட்டவையாயும் அற்புதங்களாயும் அபரிமிதங் களாயுமிருக்கிற போக்ய வஸ்துக்களென்ன, போகோப கரண வஸ்துக்களென்ன, போகஸ்தானங்க ளென்ன இவை நிரம்பப் பெற்றிருப்பது ஸ்ரீவைகுண்டம். அப்ரா க்ருதங்களான சப்தாதி விஷயங்கள் போக்ய வஸ்துக் கள்; சூட்டு நன்மாலைகளும் பரிஜந பரிச்சதங்கள் முத லியனவும் போகோபகரணங்கள்; அப்ராக்ருத ரத்நமய மண்டபங்கள் க்ரீடா பர்வதங்கள் முதலானவை போக ஸ்தானங்கள். இவற்றாலே ஸம்ருத்தி பெற்றிருப்ப தென்றபடி.

அநந்தாச்சர்ய — நித்யமும் அபூர்வ வஸ்துபோலே அநுபவிக்கக்கூடியதாயிருக்கையாலே அளவிறந்த ஆச்சரியமாயிருக்கும்; அநந்தமஹாவிபவ—ரத்நபூஷண ஸிம்ஹாஸநாதிகளும் உத்யாந நதீ தடாகாதிகளும் அளவிறந்திருக்கையாலே அனந்தமான மஹாவிபவங்களை யுடைத்தாயிருக்கும்; அநந்தபரிமாண - ஆயாம விஸ்தாரங்களால் அளவிறந்திருக்கும். நித்யநிரவத்ய—அநித்யமாயும் அவத்யங்களோடே கூடியுமிருக்கின்ற ஸ்தானங்களிற் காட்டில் வாசி பெற்றிருக்கும். நிரதிசய-ஆகக் கீழ்ச் சொன்னபடியிருக்கையாலே தனக்கு மேம்பட்ட ஸ்தானம் வேறொன்றில்லை யென்னும்படி யிருக்கும். இப்படிப்பட்ட ஸ்ரீவைகுண்ட லோகத்திற்கு நாதனானவனே!

(மூலம்) ஸ்வஸங்கல்பாநு விதாயி ஸ்வரூபஸ்திதி ப்ரவ்ருத்தி ஸ்வசேஷதைகஸ்வபாவ ப்ரக்ருதி புருஷகாலாத்மக விவித விசித்ராநந்த போக்ய போக்த்ருவர்க்க போகோபகரண போகஸ்தாநரூப நிகில ஜகதுதய விபவலய லீல!

ஸகல ஜகத்தினுடையவும் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களை லீலையாகவுடையவனே! என்கிறது. அந்த ஸகல ஜகத்தும் எப்படிப்பட்டதென்னில், ஸ்வஸங்கல்பாநுவிதாயி ஸ்வரூபஸ்திதி ப்ரவ்ருத்தி -தன்னுடைய ஸங்கல்பத்தை யநுஸரித்த ஸ்வரூபஸ்திதி ப்ரவ்ருத்திகளை யுடைத்தாயிருக்கும்.

[இந்த விசேஷணம் ப்ரக்ருதி புருஷ காலங்களில் அந்வயிப்பது] ஸ்வசேஷதைகஸ்வபாவ — தனக்கு சேஷப்பட்டிருக்கையையே இயல்வாகவுடையது. [இதுவும் ப்ரக்ருதி புருஷகால விசேஷணம்] ப்ரக்ருதியும் புருஷனும் காலமுமாகிய இவையே ஜகத்தாக இருப்பதனால் ப்ரக்ருதி

புருஷ காலாத்மக என்றது. இவற்றின் ஸ்வரூபஸ்திதி ப்ர வ்ருத்திகள் எம்பெருமானுக்கே அதீநமாய் இவை அவ னுக்கே சேஷப்பட்டிருக்கையாலே முன்னே இரண்டு விசேஷணங்கள் இடப்பட்டன. இம்மூன்றனுள்ளும் புருஷனென்கிற சேதநன் போக்தாவாயும், ப்ரக்ருதியா னது [ப்ரக்ருதியைச் சொன்னது ப்ராக்ருத வஸ்துக்களுக் கெல்லாம் உபலக்ஷணம்] போக்ய போகோபகரண போகஸ்தானங்களாயுமிருக்கும். இந்த ஜகத்து கால கார்யமென்று காட்டுகைக்காகக் காலத்தையும் கூட்டி யருளிச் செய்தது. காலத்தை போகோபகரணத்தில் சேர்க்கலாம். ஆக, ப்ரக்ருதி புருஷ காலாத்மகமான, விவித - பலவகைப்பட்டும், விசித்ர - விசித்திரங்களாயும், அநந்த — அபரிமிதங்களாயுமிருக்கிற, போக்ய போக்த்ரு வர்க்க போகோபகரண போகஸ்தாநரூப - போக்யமென்ன போக்த்ருவர்க்கமென்ன போகோபகரணங்களென்ன போகயோக்யமான ஸ்தானவிசேஷங்களென்ன இவற்றை வடிவாகவுடைய, நிகிலஜகத் - ஸகல லோகங்களினுடைய வும், உதயவிபவலய - ஸ்ருஷ்டிஸ்திதி ஸம்ஹாரங்களை, லீல- விளையாட்டாக வுடையவனே !

ஸத்யகாம ! — நினைக்குமதெல்லாம் நிறைவேறப் பெற்றிருக்குமவனே !

ஸத்யஸங்கல்ப - ஸங்கல்பித்தபடியெல்லாம் செய்து தலைக்கட்ட வல்லவனே !

பரப்ரஹ்மபூத - பரப்ரஹ்மமென்று பேர்பெற்றவனே!

புருஷோத்தம - உத்தமபுருஷனே !

மஹாவிபூதே - அளவுகடந்த நியாம்ய வஸ்துக்களை யாள்பவனே !

ஸ்ரீமந் - லக்ஷ்மீபதியானவனே !

நாராயண ! - நாராயணனென்று பேர்பெற்றவனே !

வைகுண்டநாத ! - நித்யவிபூதிநாதனே !

[இந்த எட்டு ஸம்போதனங்களும், மேலே வரும் ஸம்போதநங்களும் பெரும்பாலும் கீழுள்ள ஸம்போதனங்களினுல் சரிதார்த்தமாலும், பெருவிடாய்ப்பட்டவன் நீரிலே விழுந்து நீரைப் பலமுகமாக உபயோகங்கொள்ளுமாபோலே இவருடைய அலமாப்பு விலக்ஷணமாயிருக்கையாலே இவற்றில் புநருக்திசங்கை கொள்வதும் தத்பரிஹாரவழிகளைச் சிந்திப்பதும் வேண்டா.]

அபாரகாருண்ய ஸௌசீல்ய வாத்ஸல்யௌதார்யைச்வர்ய ஸௌந்தர்ய மஹோததே !—

அபாரமான கருணை சீலம் வாத்ஸல்யம் ஔதார்யம் ஐச்வர்யம் ஸௌந்தர்யம் ஆகிற திருக்குணங்களுக்குப் பெருங்கடலானவனே!. இவற்றின் விவரணம் கீழே செய்யப்பட்டுள்ளது.] இங்கு ஐச்வர்யத்தைச் சேர்த்திருப்பது மாத்திரம் விசேஷித்துக் குறிக்கொள்ளத்தக்கது. “ஸம்ஸாரிணாம் ஸம்ரக்ஷணவிபாதகசேஷவி தாநு ஸ்வாதந்த்ர்யமியம் . ரக்ஷிதும் பக்த உத்யஹிப்ரேதய் ஸௌலப்யம் விதந்தக்ஷ.” என்பது ச்ருதப்ரகாசிகாசார்யருடைய வியாக்கியான ஸ்ரீஸூக்தி. தேசிகன் இதைப் போஷித்து அருளிச் செய்திருக்கும்படி காண்மின் “ஸௌலப்யம்ஸ்வ கமநஹிஹ ஸநாதிகாயம் ஸ்வரக்ஷண விவரீதவநீதாநு கெந திஷ்யாஜெந ஸ்வபஜெவமியசாஹிஜீவீகஸௌதீதி ஜ்ஞாவயிதவ்ய.” என்ருர். * இசைவித்தென்னையுன் தாளிணைக்கீழிருத்துமம்மானே! * என்று ஆழ்வாரருளிச் செய்ததைப் பன்னியுரைத்தபடி.

அநாலோசித விசேஷ அசேஷலோக சரண்ய !— ஜன்மவ்ருத்த ஜ்ஞானங்களில் வாசிபாராதே எப்படிப் பட்டவர்களும் வந்து பணியும்படி அவர்களுக்கெல்லாம் தஞ்சமாயிருக்குமவனே ! 𑌅𑌨𑌾𑌲𑍋𑌚𑌿𑌤𑌵𑌿𑌶𑍇𑌷𑌂 𑌯𑌥𑌾 𑌤𑌥𑌾 𑌅𑌶𑍇𑌷𑌾𑌣𑌾𑌂 𑌲𑍋𑌕𑌾𑌨𑌾𑌂 𑌶𑌰𑌣𑍍𑌯 ! என்க.

ப்ரணதார்த்திஹர!—அடிபணிந்தவர்களுடைய ஆர்த்திகளைத் தீர்க்குமவனே !

ஆச்ரித வாத்ஸல்யைக ஜலதே -- அடியார்களின் குற்றங்களை யெல்லாம் நற்றமாகக் கொள்ளுகையாகிற குணத்திற்குக் கடலாயிருக்குமவனே !

அநவரதவிதித நிகிலபூத ஜாத யாதாத்ம்ய ! - ஸகல பதார்த்தங்களினுடையவும் உண்மையை எப்போதும் அறியுமவனே ! இத்தால் ஸர்வஜ்ஞத்வம் சொல்லுகிறது. ஆகிஞ்சந்யம் அநந்யகதித்வம் முதலான என்னுடைய நிலைமைகளை நான் விண்ணப்பம் செய்யவேண்டாதபடி நீயே யறிந்துகொள்ளவல்லவனல்லையோ என்றபடி.

அசேஷ சராசரபூத நிகில நியமந நிரத ! - ஜங்கம ஸ்தாவரங்களான ஸகல பதார்த்தங்களையும் நியமிக்கவல்லவனே ! இப்படி என்னை உன் திருவடிவாரத்திலே வந்து நிற்கப் பண்ணினதும் நீயேயன்றோ என்றபடி.

அசேஷசிதசித்வஸ்து சேஷிபூத ! - ஸகல சேதநாசேதநங்களுக்கும் சேஷியானவனே ! என் பக்கலில் கைங்கரியம் கொள்ளவேண்டியது உனது கடமையன்றோ என்றபடி.

நிகில ஜகதாதார ! - ஸகலஜகத்துக்கும் ஆதாரமா யிருப்பவனே !

அகில ஜகத் ஸ்வாமிந்!— ஸகல ஜகத்துக்கும் ஸ்வாமி யானவனே !

அஸ்மத்ஸ்வாமிந்!—விசேஷித்து என்வரையில் ஸ்வாமி யானவனே!

ஸத்யகாம!—அவாப்த ஸமஸ்தகாமனே!

ஸத்யஸங்கல்ப !—ஒருவரால் தடுக்கவொண்ணுமல் செவ்வனே நிறைவேறவல்ல ஸங்கல்பங்களை யுடையவனே!

ஸகலேதரவிலக்ஷண!—மற்றும் எல்லாரிற்காட்டிலும் எல்லாப்படியாலும் வாசிபெற்றவனே!

அர்த்திகல்பக!—(இதற்கு மூன்று படியாகப் பொருள் கூறுவர்.) (1) யாசகர்களுக்குக் கல்ப வ்ருக்ஷமாக இருப்பவனே! (2) யாசகர்களைக் கல்பவிருக்ஷமாக உடையவனே! (3) யாசகனும் கல்பவ்ருக்ஷமாயுமிருப்பவனே!.

அர்த்தி ச அஸௌ கல்பகஶ்ச இதி அர்த்திகல்பக: என்றும் ஸமாஸம் பண்ணலாமாகையாலே, அர்த்திகளை யுண்டாக்குமவன் என்கிற நான்காவது பொருளும் பொருந்தும்.

ஆபத்ஸக !—ஆபத்காலங்களிலே துணையாயிருக்குமவனே!

ஶ்ரீமந் நாராயண!—பெரிய பிராட்டியாரை விட்டுப் பிரியாத திருமாலே !

**அசரண்யசரண்ய!—புகலற்ருர்க்குப் புகலானவனே!**

அநந்யசரண꞉ த்வத்பாதாரவிந்தயுகளம் சரணம் அஹம் ப்ரபத்யே—*புகலொன்றில்லாவடியேன் உன்னடிக்கீழமர்ந்து புகுந்தேனென்கிறது.*

வ்யா. [ஊ_தூ_ஷயமு—அத்ர த்வயம்.] "ஸ்ரீமந்நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே, ஸ்ரீமதே நாராயணாய நம꞉." *என்கிற த்வய மந்த்ரத்தை இங்கே அநுஸந்திக்கக்கடவது என்றபடி. எம்பெருமானார் இவ்விடத்தில் த்வயாநுஸந்தானம் தாம் செய்ததை அஸ்மதாதிகளுக்கும் சிக்ஷிக்கிறபடி. இன்றைக்கும் இவ்விடமநுஸந்திக்கும்போது த்வயத்தை உபாம்சுவாக அநுஸந்திப்பது ஸம்ப்ரதாயம். த்வயத்தின் பூர்வகண்டம் கீழே வியாக்கியானிக்கப்பட்டதாயிற்று. பெரும்பாலும் மேற்பகுதி உத்தரகண்ட வியாக்கியானமாயிருக்கும்.*

[மூலம்] * வி தரம் ஊ தரம் உாராநு வ—த்ராநு
வ பு ஸுநு ஸ்வீநு ரு—ரு—ஸுநு । ர த்நா நி ய' நயா நூ்யா நி
கேஷ த்ராணி ச ரு ஹாணி ச ॥ ஸவ த்மா ம் ஹு ஸம் த்யஜ்ய
ஸவ காமாம் ஹு ஸாக்ஷராநு । லோகவிக்ராந்த சரணௌ
சரணம் தேவ்ரஜம் விபோ ॥ *

[*பிதரம் மாதரம் தாராந் புத்ராந் பந்தூந் ஸகீந் குரூந், ரத்நாநி தநதாந்யாநி க்ஷேத்ராணி ச க்ருஹாணி ச, ஸர்வதர்மாம்ச் ச ஸந்த்யஜ்ய ஸர்வகாமாம்ச் ச ஸாக்ஷராந், லோகவிக்ராந்த சரணௌ சரணம் தேவ்ரஜம் விபோ! *]

இவையிரண்டும் *புராண ச்லோகங்கள். இந்த ச்லோகங்களை இங்கே உபாதானம் செய்வது எதற்காக*

வென்னில், *முன்னோர் மொழிபொருளேயன்றி அவர் மொழியும் பொன்னேபோல் போற்றத்தகுவனவாதலால், முன்னோர்மொழிந்த மொழிகளையும் இந்த ப்ரகரணத்தில் விண்ணப்பஞ் செய்வது எம்பெருமான் திருவுள்ளத்தில் அநுக்ரஹாதிசயத்தை விளைவிக்குமென்று திருவுள்ளம் பற்றியே. இந்தச்லோகங்களினால் மீண்டும் சரணாகதி செய்தருளுகிருரென்று நினைக்கவொண்ணாது. *ஸக்ருதேவ ஹி சாஸ்த்ரார்த்த:* ஆகையாலே ஆவ்ருத்திக்கு ப்ரஸக்தி யில்லை.

விபோ!—எம்பெருமானே!, பிதரம் மாதரம் தாராந் புத்ராந் பந்தூந் ஸகீந் குரூந்—பிதாவையும், மாதாவையும், மனைவியையும், மக்களையும், சுற்றத்தாரையும், தோழன்மாரையும், ஆசார்யர்களையும், ரத்நாநி தநதாந்யாநி க்ஷேத்ராணி ச க்ருஹாணி ச—ரத்நங்களையும் தனதாந்யங்களையும் கிராம பூமிகளையும், வீடுகளையும், ஸர்வதர்மாந் ச—ஸர்வதர்மங்களையும், ஸாக்ஷராந் ஸர்வகாமாந் ச—கைவல்யமுட்பட ஸகல காம்ய புருஷார்த்தங்களையும், [ஸ்வர்க்கலோகாதிபத்யம் ப்ரஹ்மலோகாதிபத்யம் முதலியவற்றில் ஆசையையும் என்றபடி.] ஸம்த்யஜ்ய - வாஸனையோடே விட்டொழிந்து, தே லோக விக்ராந்த சரணௌ சரணம் அவ்ரஜம் - உனது உலகமளந்த பொன்னடியே அடைந்துய்ந்தேன் என்றபடி.

இங்கே தாராந் புத்ராந் பந்தூந் ஸகீந் ரத்நாநி இத்யாதிகளை விட்டதாகச் சொல்வதில் விப்ரதிபத்தி யொன்றுமில்லை. பிதரம் மாதரம் குரூந் - என்று தந்தைதாயரையும் ஆசாரியரையும் விட்டதாகச் சொல்வது பொருந்துமோ? * ஊதுரதெவொ ஹவ, விதரதெவொ ஹவ, ஆசாயதெவொ ஹவ * என்று சாஸ்த்ரக்கட்டளை விளங்கும்போது அதனை

அதிலங்கனம் செய்வது தகுதியோ? தாய்தந்தையரை விடலாமென்று ஒருவாறு உபபாதித்தாலும் ஆசார்ய த்யாகம் ஒருபடியாலும் உபபாதிக்கவொண்ணாதன்றே. * பஞ்சாசார்யபதாச்ரித: * என்று போற்றப்பட்ட எம்பெருமானார் தாம் ஒரு ஆசார்யரையும் விட்டவருமல்லரே. ஆகவே, உண்மையில் த்யாஜ்யங்களான யுநயாநதீராதிக ளோடொக்க த்யஜிக்கவொண்ணாத விஷயங்களையும் த்யஜித்ததாக அருளிச்செய்கிறவிதற்கு உபபத்தி எங்ஙனே? என்று சிலர் சங்கிக்கக்கூடும். கேண்மின், இவர்களை விட்டுவிடுவதாவது விரோதப்பட்டுத் தள்ளிவிடுவதன்று. காரஜ்யலெ-ரவயொ ரியாகவோ, சுய-ஃகாரெஞவயொ ரியாகவோ இவர்களைக் கொள்ளாததுவே இங்கு த்யாகமாவது. 'க்ருஹாணி ச' என்று வீட்டையும் விட்டுவிடுவதாக இங்குச் சொல்லப்படுகிறது. வீடாவது வாஸஸ்தானம். ஸம்ந்யாஸிகளானாலும் ஒரு வாஸஸ்தானமின்றிக்கே ஆகாசத்தில் நிற்கமுடியாதே, ஓரிருப்பிடம் அவசியம் வேண்டியதாய் அவர்ஜநீயமானபின்பு இதையும் விட்டதாகச் சொல்வதன் கருத்தை ஆராயவேணுமே. இவ்வுலகில் வாழுமளவும் யுநயாநதீங்களையும் விட்டிருக்கமுடியுமோ! பரமைகாந்திகளாய் நேராகத் தாங்களே தனதாந்யங்களை வைத்துக்கொள்ளாவிடினும் தமக்கு ப்ரதிநிதிகளாகச் சில அந்தரங்க சிஷ்யர்களாவது அவற்றை வைத்துக்கொள்ள வேணுமே; அல்லாதபோது தேஹயாத்ரை நிர்வஹிக்கும் வகையில்லையே. ஆதலால் இங்குச் சொல்லுகிற த்யாகம் ஸர்வாத்மநா த்யாகமன்று என்று கொள்ளவேணும். "தாராந் பந்தூந் ஸகீந்" என்னும்படியான சில விஷயங்களை ஸர்வாத்மநா த்யஜிக்கக் குறையென்? என்றாலும், கீழே விவரித்த கணக்கிலே த்யஜிக்கவொண்ணாதவற்றையும் த்ய

ஜித்த்தாகச் சொல்லுகிறதற்குக் கருத்து அறியத்தக்கதே. “கொண்ட பெண்டிர் தாம் முதலாக் கூறுமுற்றார் கன்மத்தால், அண்டினவரென்றே அவரைவிட்டுத்—தொண்டருடன் சேர்க்கும் திருமாலைச் சேருமென்றான் ஆர்க்குமிதம் பார்க்கும் புகழ்மாறன்பண்டு” [திருவாய்மொழி நூற்றந்தாதி 81] என்று மணவாளமாமுனிகள் அருளிச் செய்தபடியே, ஆழ்வார் *கொண்ட பெண்டிர் மக்களுற்றார்* என்கிற திருவாய்மொழியிலே கொண்டபெண்டிரையும் மக்களையும் விட்டொழிக்குமாறு உபதேசித்தருளினது வாஸ்தவமே. அந்த ஆழ்வார் தாமே அதன் கீழ்ப் பாசுரத்தில் * ஆயிரத்துளிவையும் பத்தும் வல்லார்கள், நல்ல பதத்தால் மனைவாழ்வர் கொண்ட பெண்டிர் மக்களே* என்றருளிச்செய்ததும் குறிக்கொள்ளத்தக்கது. ஓரிடத்தில் ஹேயமாகச்சொன்ன குடும்பவாழ்க்கையையே மற்றோரிடத்தில் [பலச்ருதி கூறும் முகத்தால்] உபாதேயமாக அருளிச் செய்தாரென்றால், த்யாஜ்யமாகைக்கு நிபந்தனம் வேறு, உபாதேயமாகைக்கு நிபந்தனம் வேறு என்று தெரிந்துகொள்ள ப்ராப்தமாகுமன்றோ. *ஏ-ரெ ஈவஸ்வஷிவஷஸ் காய-ஃகாய-ஃஜ்ஜா ந தஃ। உத்தமம் ஸ்ர்திவஷ ஷஸ் ஷைவஸ்ஜாஹெ ஸிஷீயதெ॥* என்பது முதலான சாஸ்திரங்களையும் துணைகொண்டு அர்த்த நிஷ்கர்ஷம் பண்ணவேணும். *தன் குருவின் தாளிணைகள் தன்னிலன்பொன்றில்லாதார், அன்புதன்பால் செய்தாலும்அம்புயைகோன்—இன்பமிகு விண்ணாடு தானளிக்கவேண்டியிரான், ஆதலால் நண்ணாரவர்கள் திருநாடு * என்றும் * ஞானமனுட்டான மிவை நன்றாகவே யுடையனான குருவையடைந்தக்கால்—மாநிலத்தீர் தேனார் கமலத் திருமாமகள் கொழுநன் தானே வைகுந்தந் தரும் ” என்றும் அருளிச்

செய்தபடியே ஆசார்ய ஸம்பந்தமே முக்திக்கு முதல் தனி வித்தாயிருக்க அப்படிப்பட்ட ஆசார்ய ஸம்பந்தத்தையும் குலைத்துக் கொள்வதாக இங்கு அருளிச் செய்கிருரென்று அர்த்தம் கொள்ள அவகாசலேசமுமில்லை. மாதாபிதாக்களையும் ஆசார்யர்களையும் புத்ரமித்ராதிகளையும் பகவத் விபூதிகளாகக் கருதுகின்றேனென்பதுவே இங்குப் பரம தாத்பர்யம். இவர்கள்தாமே பகவத்பாகவதாநுபவ விரோதிகளாகில் இவர்களை ஸர்வாத்மநா த்யஜிக்கவும் ப்ராப்தமே. இன்னமும் விரிவு பெரியார்பக்கல் கேட்டுணர்வது. (6)

(மூலம்) *[Grantha script verse] (7)

[த்வமேவ மாதா ச பிதா த்வமேவ த்வமேவ பந்துச் ச குருஸ் த்வமேவ, த்வமேவ வித்யா த்ரவிணம் த்வமேவ த்வமேவ ஸர்வம் மம தேவதேவ !.] (எ)

ஹே தேவதேவ ! —வாராய் தேவாதிதேவனே ! மாதா ச த்வமேவ, பிதாச த்வமேவ — தாயும் நீயே தகப்பனும் நீயே ; பந்துச் ச த்வமேவ, குருச் ச த்வமேவ—உற்ருரும் நீயே ஆசாரியனும் நீயே ; வித்யா த்வமேவ, த்ரவிணம் த்வமேவ—ஞானமும் நீயே, பொருளும் நீயே. மம ஸர்வம் த்வமேவ- (பலசொல்லியென்?) எனக்குஎல்லாமும் நீயே. * பெற்ற தாய் நீயே பிறப்பித்த தந்தை நீ, மற்றையாராவாரும் நீ பேசில் * சேலேய் கண்ணியரும் பெருஞ் செல்வமும் நன்மக்களும் மேலாத் தாய்தந்தையும் அவரே யினி யாவாரே * என்ற அருளிச்செயல்களை

இங்கே அநுஸந்திப்பது. கீழே பிதரம் மாதரம் தாராந் என்ற ச்லோகத்தில் விட்டவையாகச் சொல்லப்பட்டவை யெல்லாம் எம்பெருமானே யென்று இந்த ச்லோகத்தினால் சொல்லிற்றாயிற்று. எம்பெருமான் ப்ரியப்ரவர்த்தகனாகை யாலே தாயாகவும் ஹிதப்ரவர்த்தகனாகையாலே தகப்ப னாகவும், மற்றும் ஸகலவித பந்துக்களும் செய்யக்கூடிய உபகாரங்களை யெல்லாம் செய்வதனால் பந்துவாகவும் *கலை களும் வேதமும் நீதி நூலும் கற்பமும் சொற்பொருள் தானும் மற்றை நிலைகளுமெல்லாம் நீர்மையினாலருள் செய்ததனாலே ஆசார்யனாகவும் இப்படியெல்லாமுமாகச் சொல்லக்குறையில்லை. திருமங்கையாழ்வார் "பேயிருக்கு நெடுவெள்ளம் பெருவிசும்பின் மீதோடிப் பெருகுகாலம் தாயிருக்கும்வண்ணமே உம்மைத் தன் வயிற்றிருத்தி யுய் யக் கொண்டான்" என்று அருளிச்செய்ததைக்கொண்டு இவ்விடத்து வியாக்கியானத்தில் ஆச்சான்பிள்ளை காட்டி யருளின சுவைப்பொருளை தேசிகன் "[illegible]" என்ற ஸ்ரீ ஸூக்தியால் தழுவியிருப்பது ரஸிக்கத்தக்கது. த்வமேவ வித்யா—* நாவினுள் நின்று மலரும் ஞானக்கலைகளுக்கெல் லாம் ஆவியுமாக்கையுந்தானே * என்ற திருவாய் மொழி காண்க. "நோற்ற நோன்பிலேன் நுண்ணறிவி லேன்" என்றிருக்கும் அகிஞ்சநர்கள் உபாஸநரூப வித் யாஸ்தானத்திலே எம்பெருமானையே நிறுத்துவர்களிறே. த்ரவிணம் த்வமேவ – உபாயோபேயங்களிரண்டும் நீயே யென்று காட்டினபடி. உலகில் த்ரவ்யத்தைக் கார்யாந்த ரங்களுக்கு ஸாதனமாகக் கொள்வதும் ஸ்வயம் போக்ய மாகக் கொள்வதும் ப்ரத்யக்ஷமே, அது எம்பெருமான் திறத்திலுமொக்கும். (7)

(மூலம்) *𑌪𑌿𑌤𑌾𑌸𑌿 𑌲𑍋𑌕𑌸𑍍𑌯 𑌚𑌰𑌾𑌚𑌰𑌸𑍍𑌯 𑌤𑍍𑌵𑌮𑌸𑍍𑌯 𑌪𑍂𑌜𑍍𑌯𑌶𑍍𑌚 𑌗𑍁𑌰𑍁𑌰𑍍𑌗𑌰𑍀𑌯𑌾𑌨𑍍। 𑌨 𑌤𑍍𑌵𑌤𑍍𑌸𑌮𑍋𑌽𑌸𑍍𑌤𑍍𑌯𑌭𑍍𑌯𑌧𑌿𑌕𑌃 𑌕𑍁𑌤𑍋𑌽𑌨𑍍𑌯𑍋 𑌲𑍋𑌕𑌤𑍍𑌰𑌯𑍇𑌽𑌪𑍍𑌯𑌪𑍍𑌰𑌤𑌿𑌮𑌪𑍍𑌰𑌭𑌾𑌵 !* (8)

[பிதாஸி லோகஸ்ய சராசரஸ்ய த்வமஸ்ய பூஜ்யச் ச குருர் கரீயாந், ந த்வத் ஸமோஸ்தயப்பதிக: குதோந்யோ லோக த்ரயே ப்யப்ரதிமப்ரபாவ ! . ] (அ)

அஸ்ய சராசரஸ்ய லோகஸ்ய த்வம் பிதா அஸி — [கீழே உபாத்தமான ச்லோகத்தில் எம்பெருமானைத் தாமொருவர்க்கே மாதா பிதாவாகச் சொல்லிநின்றது, அந்த வுறவு ஸர்வலோகஸாதாரண மாகையாலே அதைத் தெரிவிக்கும் ச்லோகத்தை இப்போது அநுஸந்திக்கிருர். பகவத்கீதையில் பதிஞேராமத்யாயத்தில் நாற்பத்து மூன் ருவது ச்லோகமிது. இதற்கடுத்த ச்லோகமும் இங்குச் சேர்த்தே அநுஸந்திக்கப்படுகிறது.] அப்ரதிமப்ரபாவ !— ஒப்பில்லாப் பெருமைபெற்ற மாயோனே ! த்வம் அஸ்ய சராசரஸ்ய லோகஸ்ய பிதா அஸி—நீ ஸ்தாவரஜங்கமாத்மக மான இவ்வுலகுக்கெல்லாம் தந்தையாயிராநின்ருய்; அஸ்ய லோகஸ்ய பூஜ்ய: குருச்ச அஸி—இவ்வுலகுக்குப் பூஜிக்கத் தகுந்த ஆசார்யனுகவுமிராநின்ருய். ஆகையினுலே, இவ் வுலகுக்கெல்லாம் பூஜ்யதமனுயிராநின்ருய். லோகத்ரயேபி த்வத்ஸம: அந்ய: நாஸ்தி — காருண்யம் முதலிய குணங் களினுல் உன்னையொத்தவன் மூவுலகிலும் வேருெருவனு மில்லை ; அப்யதிக: குத: ? — ஸமானன் இல்லையென்னும் போது மேற்பட்டவனில்லையென்னுமிடம் சொல்லவேணு மோ? * ஒத்தார் மிக்காரையிலையாய மாமாயனுயிரா நின்ரு யென்றபடி.

இங்கு த்வத்ஸம: நாஸ்தி என்றுதே த்வத்ஸம: அந்ய: நாஸ்தி என்கையாலே உனக்கு ஒப்பானவன் நீயே என்றதாகும். "உவஊாநொவஊெயக்ஷம யஜெகவெொஜூவ வஷு—நஃ। ஊ ஊ—ஙிஷ—ஙிவ ஸ்ரீஊாநிதூாஜெள தஊநகூயஃ" என்பர் ஆலங்காரிகர். "ககநம் ககநாகாரம் ஸாகரஸ் ஸாகரோபம:; ராமராவணயோர் யுத்தம் ராம ராவண யோரிவ." இத்யாதிகளுங் காண்க. "தன்னெப்பான் தானுயுளன்காண்" என்றூர் திருமழிசைப்பிரானும். (8)

(மூலம்) *தஊாக் ஹூணஊ ஹூணியாயகாயம் ஹூஸா உயெ க்ஷாஊஹஈஶஊீஷ்ூழ। விதெவ வ—தூஷ ஸவெவ ஸவூ—ஃ வியஃ வியாயாஹஷி தெவ ஸொஊ—ழ॥* (9)

*தஸ்மாத் ப்ரணம்ய ப்ரணிதாய காயம் ப்ரஸாதயே த்வா மஹ மீச மீட்யம், பிதேவ புத்ரஸ்ய ஸகேவ ஸக்யு: ப்ரிய: ப்ரியாயார்ஹஸி தேவ! ஸோடும்.* (கூ)

தஸ்மாத்- கீழ்ச்லோகத்திற் சொல்லியபடி நீ ஸர்வஸ் மாத் பரனுயிருக்கையாலே, அஹம்—குற்றங் குறைகளே வடிவெடுத்திருக்கிற நான், ஈசம் ஈட்யம் த்வாம் - ஸர்வ நியந்தாவாயும் ஸ்தோத்ரார்ஹனுயுமிருக்கிறவுன்னை, காயம் ப்ரணிதாய ப்ரணம்ய - (வேரற்ற மரம்போலே) உடலைக் கீழேயிட்டுத் தொழுது, ப்ரஸாதயே - க்ஷமை வேண்டு கின்றேன்; தேவ - பெருமானே!, புத்ரஸ்ய (தோஷம்) பிதேவ—மகனுடைய குற்றத்தைத் தகப்பன் பொறுப்பது போலவும், ஸக்யு: தோஷம் ஸகேவ- மித்திரனுடைய அப ராதத்தை மித்திரன் பொறுப்பது போலவும், ப்ரியாய (மஹ்யம்) - அன்பனுன என்பொருட்டு, ப்ரிய: (த்வம்) ஸோடும் அர்ஹஸி- அன்பனுன நீ (எனது அபராதங்களைப்)

பொறுக்கவல்லே; *ப்ரிய: ப்ரியாயார்ஹஸி * என்றவிடத்தில் ‘ ப்ரிய: ப்ரியாயா: அர்ஹஸி ’ என்றும் பதம் பிரிக்கலாம். அப்போது ஆர்ஷஸந்தியாகக் கொள்ளவேணும். காதலியினுடைய குற்றத்தைக் காதலன் பொறுக்குமா போலவும் என்றபடி. (9)

(மூலம்) மநோவாக்காயைரநாதிகால ப்ரவ்ருத்தாநந்தாக்ருத்யகரணக்ருத்யாகரண ஭கவத஡பசார ஭ாகவதாபசாராஸஹ்யாபசாரரூப நாநாவிதாநந்தாபசாராந் ஆரப்தகார்யாந் அநாரப்தகார்யாந் க்ருதாந் க்ரியமாணாந் கரிஷ்யமாணாம்ஶ்ச ஸர்வாந் அஶேஷத: க்ஷமஸ்வ ॥ (10)

[மநோவாக் காயை ரநாதி கால ப்ரவ்ருத்தாநந்தா க்ருத்ய கரண க்ருத்யாகரண பகவதபசார பாகவதா பசார அஸஹ்யா பசார ரூப நாநாவிதாநந்தாபசாராந் ஆரப்த கார்யாந் அநாரப்த கார்யாந் க்ருதாந் க்ரியமாணாந் கரிஷ்யமாணாம்ச் ச ஸர்வாந் அசேஷத: க்ஷமஸ்வ.] (ய)

மநோவாக்காயை: – மனம் மொழி மெய் என்கிற மூன்று உறுப்புகளினுலும், அநாதிகால ப்ரவ்ருத்த – அடிதெரியாத நெடுநாள் முன்னுக விளைந்த, அநந்த் - அளவிறந்த, அக்ருத்யகரண - செய்யத்தகாத காரியங்களைச் செய்வதும், க்ருத்யாகரண - செய்யவேண்டிய காரியங்களைச் செய்யாதொழிவதும், பகவதபசார - எம்பெருமான் திறத்தில் அபசாரப்படுகையும், பாகவதாபசார - அவனடியார்கள் திறத்தில் அபசாரப்படுகையும், அஸஹ்யாபசார ரூப – பொறுக்கவொண்ணுதபடி அபசாரப்படுகையுமாக இங்ஙனேயுள்ள, நாநாவிதாநந்தாபசாராந் – பலவகைப் பட்ட அபரிமிதங்களான குற்றங்களை, (இதற்கு ‘ அசேஷத : க்ஷமஸ்வ’ என்றதிலே அந்வயம்.) அசேஷத:

அணுவளவும் மிச்சமில்லாதபடி, க்ஷமஸ்வ - பொறுத்தருளவேணும். இவ்வபசாரங்கள் எப்படிப்பட்டவையென்னில் ; ஆரப்தகார்யாந் - பலன் கொடுக்க ஆரம்பித்தவையாயிருக்கும் சில அபசாரங்கள். அநாரப்தகார்யாந்—இன்னமும் பலன் கொடுக்க ஆரம்பியாமலிருக்கும் சில பாபங்கள். க்ருதாந் க்ரியமாணாந் கரிஷ்மாணாந் ச — இறந்த காலத்திலும் நிகழ்காலத்திலு மெதிர்காலத்திலுமாக த்ரிகால வ்யாபிகளா யிருக்கு மிவ்வபசாரங்கள். இவ்வபசாரங்களனைத்தையும் பொறுத்தருள வேணுமென்றாராயிற்று.

ஸர்வாந் — உலகில் அவரவர்கள் செய்யும் அபசாரங்களானவை மாநஸிகங்களாயும் வாசிகங்களாயும் காயிகங்களாயும் இருப்பது ப்ரஸித்தமாயிருக்க * மநோவாக்காயை: ப்ரவ்ருத்த * என்று சொல்லவேணுமோவென்னில் ; எம்பெருமானைச் சிந்திப்பதற்காக அமைந்த மநஸ்ஸையும், அவனைத் துதிப்பதற்காக அமைந்த வாக்கையும், அவனுக்குப் பணிவிடைகள் பலவுஞ் செய்வதற்காக அமைந்த உடலையுங்கொண்டு அந்தோ ! வ்யபிசரிக்கலாயிற்றே ! என்கிற நிர்வேதம் இச்சொல்தொடையிலே தோன்றும்.

இக்குற்றங்கள் எத்தனை நாளாகச் செய்யப்பட்டவையென்ன, அநாதிகாலப்ரவ்ருத்த என்கிறார். ஸம்ஸாரமோ அநாதி ; *பஹூநி மே வ்யதீதாநி ஜந்மாநி தவ சார்ஜுந ! * என்று கீதையிலருளிச் செய்தபடியே கீழ்க் கழிந்த ஜன்மங்களுக்கோ தொகையில்லை. இப்படி அடி தெரியாத காலந் தொடங்கி ப்ரவ்ருத்தமானவை. ஆனது பற்றியே அனந்தங்களுமானவை. அவற்றை வகையிட்டுச் சொல்லுகிறார் (அக்ருத்யகரண) என்று தொடங்கி.

அக்ருத்யகரணமாவது — செய்யத்தகாதவையாக சாஸ்த்ரங்களில் மறுக்கப்பட்டுள்ள தீய கருமங்களைச் செய்வது. * ந ஹிம்ஸ்யாத் ஸர்வா பூதாநி * என்கிற விதியை அதிக்ரமித்துப் பண்ணுகிற ப்ராணிபீடை, ப்ராப்த விஷயங்களைத் துதிப்பதற்குரிய வாக்கைக்கொண்டு அப்ராப்தவிஷயங்களைத் துதிக்கை, பிறர் பொருள் தாரமென்றிவற்றை அபஹரிக்கை, அஸத்யஞ் சொல்லுகை, பக்ஷிக்கத்தகாதவற்றை யதேச்சமாக பக்ஷிக்கை—ஆக இங்ஙனே பலவகைப்பட்டிருக்கும் அக்ருத்யகரணம்.

க்ருத்யாகரணமாவது — சாஸ்த்ரவிஹிதங்களான வர்ணாச்ரமதருமங்களைச் சோர்வு சோம்பல்களாலும் நாஸ்திக்யத்தாலும் அநுஷ்டியாதொழிகை. பகவதபசாரமாவது - தேவதாந்தரங்களோடொக்க எம்பெருமானை நினைக்கையும், ராமக்ருஷ்ணாத்யவதாரங்களில் மநுஷ்யஸஜாதீயதா புத்தி பண்ணுகையும், அர்ச்சாவதாரத்தில் உபாதாந நிரூபணம் பண்ணுகையும் முதலானவை. பாகவதாபசாரமாவது — அஹங்காரத்தாலும் அர்த்தகாமங்களடியாகவும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்குப் பண்ணும் விரோதம். அஸஹ்யாபசாரமாவது—கீழ்ச் சொன்னபடியே காரணாதி நிபந்தநமாகவல்லாமல் ஹிரண்யகசிபுவைப்போலே பகவத்விஷயமும் பாகவதவிஷயமு மென்றால் காணவும் கேட்கவும் பொறுதபடியிருக்கை. ஆசார்யாபசாரமும் அஸஹ்யாபசாரமெனப்படும்; அதாவது - ஆசார்யனருளிச் செய்த அர்த்தத்தின்படியே அநுஷ்டியாமையும், அவனுபதேசித்த மந்த்ரங்களையும் அவற்றின் அர்த்தங்களையும் அல்பப்ரயோஜனங்களுக்காக அநதிகாரிகளுக்கு உபதேசிக்கையும் இவை முதலானவை. ஆசார்யபக்தரான ஸப்ரஹ்மசாரிகளுடன்

ஜகரஸ்யமுண்டாய் வர்த்திக்கவேண்டியிருக்க அதுசெய்யாதே அவர்கள் திறத்தில் பண்ணும் அஸூயையையும் அவஜ்ஞையும் முதலானவையும் அஸஹ்யாபசார மெனப்படும். "பகவத் பக்த விஷயாபசாரா: அஸஹ்யாபசாரா:, ச்ருதாபசாரா [illegible] வா" என்பர் ச்ருதப்ரகாசிகாசார்யர். அவ்வாசிரியர், கீழே பகவதபசாரத்தையும் பாகவதாபசாரத்தையும் விவரிக்கும்போது அருளிச் செய்திருப்பது ரஸவத்தரம்; "பகவதபசாரோ பாகவதாபசார:; பாகவதாபசாரோ பகவதபசார:" என்பது அவருடைய ஸ்ரீஸூக்தி. பாகவதர்களிடத்திலே அபசாரப்பட்டால் அது பகவதபசாரமாய் முடியும். பகவானிடத்திலே அபசாரப்பட்டால் அது பாகவதாபசாரமாய் முடியும். என்றபடி * [illegible] * என்ற பகவதுக்தியையும் * [illegible] * என்ற ஆழ்வான் ஸ்ரீஸூக்தியையும் இங்கே நினைப்பது.

எம்பெருமானையே நோக்கிச் சொல்லுகிற இந்த சூர்ணையில் த்வதபசார என்று முன்னிலையாக அருளிச் செய்யவேண்டியிருக்க பகவதபசார என்று படர்க்கையாக வருளிச் செய்திருப்பது பொருந்துமோ வென்று சங்கிக்கக் கூடியதுண்டு. ஆனாலும் குறையில்லை; பகவதபசார மென்றே ப்ரஸித்தி ப்ராசுர்யமிருப்பதனால் அருளிச் செய்தபடி. * [illegible] * என்றார் தேசிகன்.

இந்த வாக்யத்தில் அநந்த பதம் இரண்டு தடவை ப்ரயோகிக்கப்பட்டிருக்கிறது. முதலிலுள்ள அநந்தபதம்-அக்ருத்யகரணக்ருத்யாகரணரூப ஸாமாந்யாபசாரங்களில் அந்வயிக்கும். இரண்டாவது அநந்தபதம் பகவதபசாராதிகளில் அந்வயிக்கும்.

* [ஆரப்தகார்யாந் அநாரப்தகார்யாந்] ப்ராரப்தகருமங்களென்றும் ஸஞ்சிதகருமங்களென்றும் கருமங்கள் இரண்டுவகையாகவுள்ளன; நாம் செய்கிற கருமங்களெல்லாம் அப்போதே உடனே பலன் கொடுக்கத் தொடங்கிவிடமாட்டா; பரிபாகக்ரமத்தில் தான் பலன் கொடுக்கும்: அப்படி பலன் கொடுக்கத் தொடங்கின கருமங்கள் ப்ராரப்தங்களெனப்படும். அவற்றையே இங்கு ஆரப்தகார்யாந் என்றது. அப்படிப்பட்ட ப்ராரப்த கருமங்களினால் [illegible] ஸஞ்சிதங்களெனப்படும். அவற்றையே இங்கு அநாரப்தகார்யாந் என்றது. (10)

(மூலம்) [illegible] ॥ ௧௧॥

[அநாதிகாலப்ரவ்ருத்தம் விபரீதஜ்ஞாநம் ஆத்மவிஷயம் க்ருத்ஸ்ந ஜகத்விஷயஞ்ச விபரீத வ்ருத்தஞ்ச அசேஷ விஷயம் அத்யாபி வர்த்தமாநம் வர்த்திஷ்யமாணம் ச ஸர்வம் க்ஷமஸ்வ. (11)

இனி, மோக்ஷவிரோதியான புண்யபாபரூபமான விலக்கடியை க்ஷமித்தருளவேணுமென்று வேண்டுகிறார்.

அநாதிகால ப்ரவ்ருத்தம் — அடிதெரியாத காலம் முதற்கொண்டு விளைந்ததாய், ஆத்ம விஷயம் க்ருத்ஸ்ந ஜகத் விஷயஞ் ச விபரீதஜ்ஞாநம் — ஆத்மாவைப்பற்றினதாயும் ஸமஸ்தஜகத்தையும் பற்றினதாயுமிருக்கிற விபரீதஞானத்தை (க்ஷமித்தருளவேணும்;) அசேஷ விஷயம் — எல்லாவற்றையும் பற்றினதாய், அத்யாபி வர்த்தமாநம் - இன்னமும் தொடர்ந்துவாராநின்றதாய், வர்த்திஷ்யமாணஞ் ச- இனிமேல் உபாஸநாபலத்தாலே விளையப்போகிறதாயுள்ள, ஸர்வஞ் ச விபரீதவ்ருத்தம் க்ஷமஸ்வ — எல்லாவிதமான நிஷித்தாநுஷ்டானங்களையும் பொறுத்தருளவேணும். ஆத்ம விஷயமான விபரீதஜ்ஞானமாவது தேஹாத்மாபிமானம், ஸ்வதந்த்ராத்மப்ரமம், அந்யசேஷத்வப்ரமம் முதலியன. க்ருத்ஸ்நஜகத்விஷயமான விபரீதஜ்ஞானமாவது — *ஸர்வபூதாத்மகே! தாத! ஜகந்நாதே ஜகந்மயே, பரமாத்மநி கோவிந்தே மித்ராமித்ரகதா குத:? * என்கிற ப்ரஹ்லாதன் படியின்றிக்கே தேவதிர்யங்மநுஷ்யாதி பதார்த்தங்களை அவையவையாக மாத்திரம்காண்கை. ஆத்மவிஷயம், க்ருத்ஸ்நஜகத் விஷயம் என்கிற விசேஷணங்கள் 'விபரீதவ்ருத்தம்' என்கிற விசேஷ்யத்திலும் அந்வயிக்கும். ஆத்ம விஷயமான விபரீதவ்ருத்தமாவது — ஸ்வரக்ஷணே ஸ்வாந்வயம் முதலானது. ஜகத்விஷயமான விபரீதவ்ருத்தமாவது - தனக்கு ஒருவன் ஒரு தீங்கு செய்தால் அதை ஸ்வகர்மபலமென்றோ க்ருபாபலமென்றோ நினையாதே, நிமித்தமாத்ரமான சேதநனை ஸ்வதந்த்ரனாகவெண்ணி அவன் நமக்குத் தீங்கிழைத்தானென்று கொண்டு அவன் திறத்தில் ஒன்றுக்குப் பத்தாகத் தீங்குகள் செய்கை. விசேஷ விஷயம்- ஐச்வர்யம் முதலிய புருஷார்த்தங்களை விரும்புகை முதலான காம்யங்களை விலக்ஷிக்கிறது. முன்பு

செய்தவற்றையும் இப்போது செய்கிறவற்றையும் இனிச் செய்யப்புகுகிறவற்றையு மெல்லாம் அறிவிலியான அடியேன் அறிகின்றிலேனுகிலும் ஸர்வஜ்ஞரான தேவரீரே அறிந்து பொறுத்தருளவேணு மென்றுராயிற்று. (11)

(மூலம்) மதீயாநாதிகர்மப்ரவாஹப்ரவ்ருத்தாம் பகவத்ஸ்வரூப திரோதாநகரீம் விபரீதஜ்ஞாநஜநநீம் ஸ்வவிஷயாயாச்ச போக்யபுத்தேர்ஜநநீம் தேஹேந்த்ரியத்வேந போக்யத்வேந ஸூக்ஷ்மரூபேண சாவஸ்திதாம் தைவீம் குணமயீம் மாயாம் தாஸபூதம் "சரணாகதோஸ்மி தவாஸ்மி தாஸ" இதி வக்தாரம் மாம் தாரய ॥ ௧௨ ॥

[மதீயாநாதி கர்ம ப்ரவாஹ ப்ரவ்ருத்தாம் பகவத்ஸ்வரூப திரோதாநகரீம் விபரீத ஜ்ஞாந ஜநநீம் ஸ்வவிஷயாயாச் ச போக்ய புத்தேர் ஜநநீம் தேஹேந்த்ரியத்வேந போக்யத்வேந ஸூக்ஷ்மரூபேண சாவஸ்திதாம் தைவீம் குணமயீம் மாயாம் தாஸபூதம் "சரணுகதோஸ்மி தவாஸ்மி தாஸ" இதி வக்தாரம் மாம் தாரய.] [12.]

இந்தசூர்ணையில் தாஸபூதம் என்று த்விதீயாந்தமாகச் சொல்லவேண்டியதை தாஸபூத: என்று ப்ரதமாந்தமாகச் சிலர் பாடஞ் செய்துவருவது மருள். தாஸபூதம் என்று த்விதீயாந்தமான பாடமே கொள்ளத்தக்கது. பூருவர்களுக்கெல்லாம் அபிமதமான பாடமும் இதுவே. தாஸபூதனும், சரணாகதோஸ்மி தவாஸ்மி தாஸ இதி வக்தாவுமான அடியேனை என்று பொருள் காண்க.

கீழ்ச்சொன்ன அஜ்ஞானத்துக்கடியான தேஹஸம்பந்தத்தைக் கழித்துத் தரவேணுமென்று ப்ரார்த்திக்கிறார்

இந்த சூர்ணையினால். எம்பெருமான் கீதையிலே * தைவீ ஹ்யேஷா குணமயீ மம மாயா துரத்யயா । மாமேவ யே ப்ரபத்யந்தே மாயாமேதாம் தரந்தி தே ॥ * [7-14] என்று சொல்லி வைத்தானிறே. அதைத் திருவுள்ளத்திற் கொண்டே இங்கு மாம் தாரய என்கிறார். மாயையாவது ப்ரக்ருதி ; அதை அடியேன் கடந்தேறும்படி செய்தருள வேணுமென்கிறார்.

மதீய அநாதிகர்ம ப்ரவாஹ ப்ரவ்ருத்தாம் — நெடுநாளாக நான் பண்ணிப்போந்த கர்மபரம்பரையாலே யுண்டானதாய்,

பகவத்ஸ்வரூப திரோதாநகரீம் — எம்பெருமானாகிய உன்னுடைய உண்மையைத் தெரிந்துகொள்ள வொட்டாது மறைப்பதுமாய்,

விபரீதஜ்ஞாந ஜநநீம் — தேஹாத்மப்ரமம் முதலிய விபரீத வுணர்ச்சியை விளைப்பதுமாய்,

ஸ்வ விஷயாயா : போக்ய புத்தேச் ச ஜநநீம்—ஸ்வ கார்யபூதமான சப்தாதிகளிலே போக்யதாபுத்தியைப் பிறப்பிப்பதுமாய்,

தேஹேந்த்ரியத்வேந போக்யத்வேந ஸூக்ஷ்மரூபேண ச அவஸ்திதாம் — போகாயதநமான தேஹரூபத்தாலும் போகோபகரணமான இந்த்ரியரூபத்தாலும் போக்யமான சப்தாதிரூபத்தாலும் இத்தனைக்கும் முதற்கிழங்கான ஸூக்ஷ்ம ப்ரக்ருதிரூபத்தாலும் [ஆக நான்கு வகைப்பட்ட பரிணாமத்தை யுடைத்தாய்] இராநின்ற,

தைவீம்—*இன்புறுமிவ்விளையாட்டுடையானுகை யாலே தேவனென்று பேர்பெற்றவன்னுலே க்ரீடாபரிகர மாகச் செய்யப்பட்டதாய்,

குணமயீம் — ஸத்வரஜஸ்தமோ குணமூர்த்தியாய்,

மாயாம் - விசித்ரகார்யகரமாகையினுலே மாயை யென்று பேர்பெற்றதான ப்ரக்ருதியை,

(இதற்கு மாம் தாரய என்றதோடே அந்வயம்.)

மாம் என்கிற விசேஷ்யவ்யக்திக்கு இரண்டு விசேஷணமிடுகிருர்— [Grantha] என்றும், [Grantha] என்றும். தாஸபூதம் — அடியேனுயும், சரணுகதோஸ்மி தவாஸ்மி தாஸ இதி வக்தாரம் — த்வயத்தில் பூர்வகண்டத்திற் படியே சரணுகதனுனேன், உத்தரகண்டத்திற்படியே கைங்கர்யநிரதனுனேன் என்று வாய்விட்டுச் சொல்பவ னுயுமிருக்கிற, மாம் — என்னை, தாரய — (ப்ரக்ருதியைக்) கடந்தவனும்படி செய்தருளவேணும். [[Grantha]] [Grantha] என்கிற விட த்திலுள்ள அஸ்மி—ப்ரார்த்தநாபிப்ராயத்தாலே ப்ரயோகிக் கப்பட்டதென்று கொள்ளவேணும். தாஸவ்ருத்திபரனு யிருக்கக் கடவேன் என்றபடி, இப்படிகொள்ளாதபோது கீழே [Grantha] என்றதையே மீண்டும் சொன்னதாக ஆகு மத்தனே - என்று தேசிகர் திருவுள்ளம் பற்றுகிருர்.

இனி சதுர்த்தியின் அர்த்தமான இஷ்டப்ராப்தியை ப்ரார்த்திக்கிருர் —

(மூலம்) * [Grantha]

𑌉𑌦𑌾𑌰𑌾𑌃 𑌸𑌰𑍍𑌵 𑌏𑌵𑍈𑌤𑍇 𑌜𑍍𑌞𑌾𑌨𑍀 𑌤𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑍈𑌵 𑌮𑍇 𑌮𑌤𑌮𑍍 । 𑌆𑌸𑍍𑌥𑌿𑌤𑌃 𑌸 𑌹𑌿 𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌤𑍍𑌮𑌾 𑌮𑌾𑌮𑍇𑌵𑌾𑌨𑍁𑌤𑍍𑌤𑌮𑌾𑌂 𑌗𑌤𑌿𑌮𑍍 ॥ 𑌬𑌹𑍂𑌨𑌾𑌂 𑌜𑌨𑍍𑌮𑌨𑌾𑌮𑌨𑍍𑌤𑍇 𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑌾𑌨𑍍𑌮𑌾𑌂 𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑌤𑍇 । 𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵𑌃 𑌸𑌰𑍍𑌵𑌮𑌿𑌤𑌿 𑌸 𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌾 𑌸𑍁𑌦𑍁𑌰𑍍𑌲𑌭𑌃 ॥ * 𑌇𑌤𑌿 𑌶𑍍𑌲𑍋𑌕𑌤𑍍𑌰𑌯𑍋𑌦𑌿𑌤𑌜𑍍𑌞𑌾𑌨𑌿𑌨𑌂 𑌮𑌾𑌂 𑌕𑍁𑌰𑍁𑌷𑍍𑌵 ॥ ௧௩ ॥

[* தேஷாம் ஜ்ஞாநீ நித்ய யுக்த ஏகபக்திர் விசிஷ்யதே, ப்ரியோ ஹி ஜ்ஞாநிநோத்யர்த்த மஹம் ஸ ச மம ப்ரிய:. உதாராஸ் ஸர்வ ஏவைதே ஜ்ஞாநீ த்வாத்மைவ மே மதம். ஆஸ்திதஸ் ஸஹி யுக்தாத்மா மாமேவாநுத்தமாம் க்திம். பஹூநாம் ஜந்மநாமந்தே ஜ்ஞாநவாந் மாம் ப்ரபத்யதே, வாஸுதேவஸ்ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப: * இதி ச்லோகத்ரயோதித ஜ்ஞாநிநம் மாம் குருஷ்வ. என்று தொடங்கி. [13]

நமச்சப்தத்தின் பொருளான விரோதி நிவர்த்தநத்தைக் கீழே ப்ரார்த்தித்தார்; அவ்வளவோடு நிற்க வொண்ணுமோ? பரமபுருஷார்த்தமான கைங்கர்ய ஸித்தியும் வேணுமே. அந்த கைங்கரியத்தை ப்ரார்த்திக்க நினைத்து, அதற்கு இன்றியமையாததாய் கைங்கர்யம் போலவே ப்ரியவிஷயமாய்த் திருநாட்டிலும் அநுவர்த்திக்குமவையான பரபக்திபரஜ்ஞான பரம பக்திகளை யபேக்ஷிக்க நினைத்து, பக்திரூபாபந்நமான ஜ்ஞானமுடையார்க்கே அவை ஸித்திக்கக் கூடுமாகையாலே அந்த ஜ்ஞானம் ஸித்திக்கவேண்டுமென்று, கீதாசார்யனருளிச்செய்த மூன்று ச்லோகங்களை முன்னிட்டுக்கொண்டு — அந்த ஜ்ஞானத்தை யுண்டாக்கி யருளவேணுமென்று வேண்டுகிறார். பகவத்கீதையில் ஏழாவது அத்யாயத்தில் பதினேழு பதினெட்டு பத்தொன்பதாம் ச்லோகங்களை அடை-

வே அநுஸந்தித்து, இந்த மூன்று ச்லோகங்களாலும் தேர்ந்த ஞானத்தையுடையேனாம்படி அடியேனைச் செய்தருளவேண்டுமென்று இரக்கிறார்.

இம்மூன்று சுலோகங்களுக்கும் அடைவே பொருள் விவரிக்கப்படுகிறது. கீழ்ச்லோகத்தில் * சதுர்விதா பஜந்தே மாம் *என்று தொடங்கி, தன்னைபஜிப்பவர்கள் நான்கு வகைப்பட்டவர்களென்றுசொன்னான்கண்ணன்;ப்ரஷ்டைச்வர்யகாமன், அபூர்வைச்வர்யகாமன், ஆத்மாநுபவமாகிற கைவல்யமோக்ஷத்தை விரும்புமவன், பகவதநுபவமாகிற பரமபுருஷார்த்தத்தை விரும்புமவன் என நால்வராகச் சொல்லப்பட்டாலும் ஐச்வர்யகாமர்களென்று ஒரே வகுப்பாதலால் மூவராகவே கொள்ளலாம். அப்படிப்பட்ட மூவகையான பக்தர்களுள் ஜ்ஞாநியென்பவன் சிறந்தவனென்கிறது [தேஷாம் ஜ்ஞாநீ....விசிஷ்யதே] என்று. அந்தச் சிறப்புக்குக் காரணமேதென்னில், [நித்யயுக்த:, ஏகபக்தி:] நித்யயுக்தனாய் ஏகபக்தியாயிருக்கையாலே ஜ்ஞாநியானவன் சிறந்தவன் என்கிறது. ஜ்ஞாநிந: அத்யர்த்தம் ப்ரிய: அஹம் — ஜ்ஞாநிக்கு என்னிடத்திலுள்ள ப்ரீதி வாசாமகோசரமென்றபடி. ஸ ச மம ப்ரிய:— அப்படியே அந்த ஞானியிடத்தில் எனக்குள்ள ப்ரீதியும் வாசாமகோசரமென்றபடி. ஏதே ஸர்வே ஏவ உதாரா:— கீழ்ச் சொன்ன அதிகாரிகள் யாவரும் என்னையே உபாஸிக்கிறபடியினால் ஔதார்யம் மிக்கவர்கள். என்னிடத்திலிருந்து சிறிதளவாகிலும் கொள்பவர்களை நான் எனக்கு ஸர்வஸ்வ தாதாக்களாக நினைப்பவனென்றபடி. ஜ்ஞாநீ து ஆத்மைவ மே மதம் — ஆனாலும் ஞானியையே நான் எனக்கு உயிராக நினைப்

பவ னென்றபடி. ஏனென்னில்; ஸ ஹி யுக்தாத்மா மாமேவ அநுத்தமாம் கதிம் ஆஸ்தித :— என்னோடு சேர்ந்தே வாழ நினைத்திருக்கிற அந்த அதிகாரியானவன் என்னையே உயர்ந்த ப்ராப்யவஸ்துவாக நினைத்திருப்பதனால் என்றபடி. [மேல் * பஹூநாம் ஜந்மநாமந்தே என்கிற ச்லோகத்தினாலும் ஜ்ஞாநியின் சிறப்பே சொல்லப்படுகிறது.] பஹூநாம் ஜந்மநாம் அந்தே — பல பல பிறப்புகள் கடந்த பிறகு, ஜ்ஞாநவாந் ஸந் — எனக்கு சேஷப்பட்டிருக்கையே ஆத்மஸ்வரூபமென்று உணர்ந்தவனாகி, மாம் ப்ரபத்யதே — ஞானியானவன் என்னைப் பணிகின்றான்; எப்படி பணிகின்றானென்னில்; வாஸுதேவஸ் ஸர்வம் இதி— * உண்ணுஞ் சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையு மெல்லாங் கண்ணன் என்கிற ப்ரதிபத்தியோடு பணிகின்றான். ஸ: மஹாத்மா ஸுதுர்லப :— அப்படிப்பட்ட மஹாத்மா எனக்குக் கிடைப்பது அரிது.

ஆக இம்மூன்று ச்லோகங்களிலும் புகழ்ந்து கூறப்பட்ட ஞானியாக அடியேனைச் செய்தருள வேணுமென்று ப்ரார்த்தித்தாராயிற்று. (13)

(மூலம்) * புருஷஸ் ஸ பர: பார்த்த! பக்த்யா லப்யஸ் த்வநந்யயா * பக்த்யா த்வநந்யயா சக்ய: * மத்பக்திம் லபதே பராம் * இதி ஸ்தாநத்ரயோதித பரபக்தியுக்தம் மாம் குருஷ்வ ॥ (14)

[*புருஷஸ் ஸ பர: பார்த்த! பக்த்யா லப்யஸ் த்வநந்யயா* *பக்த்யா த்வநந்யயா சக்ய: * மத்பக்திம் லபதே பராம்* இதி ஸ்தாநத்ரயோதித பரபக்தியுக்தம் மாம் குருஷ்வ.] (14)

* புருஷஸ் ஸ பர: பார்த்த ! * என்கிற ச்லோகம் கீதையில் எட்டாவது அத்யாயத்தில் இருபத்திரண்டாவது. * பக்த்யா த்வநந்யயா சக்ய: * என்கிற ச்லோகம் பதி ஞோமத்யாயத்தில் ஐம்பத்து நான்காவது. * மத்பக்திம் லபதே பராம் * என்பது பதினெட்டா மத்யாயத்தில் ஐம்பத்து நான்காவது. ஆக இம் மூன்றிடங்களிலும் சொல்லப்பட்ட பரபக்தி அடியேனுக்கு விளைந்ததாகச் செய்தருள வேணுமென்று ப்ரார்த்தித்தாராயிற்று. (14)

(மூலம்) [illegible] (15)

[பரபக்தி பரஜ்ஞாந பரமபக்த்யேக ஸ்வபாவம் மாம் குருஷ்வ.] (15)

பரபக்தி விளைந்தவளவிலே பர்யாப்தி பிறவாதிறே. பர பக்தி பரஜ்ஞாநம் பரமபக்தி இவையே வடிவெடுத்தவனாக அடியேனைச் செய்தருள வேணுமென்னக. (15)

(மூலம்) [illegible] (16)

[பரபக்தி பரஜ்ஞாந பரம பக்தி க்ருத பரிபூர்ணாநவரத நித்ய விசததமாநந்ய ப்ரயோஜநா நவதிகாதிசய ப்ரிய பகவதநுப வோஹம் ததாவித பகவதநுபவஜநிதாநவதிகாதிசய ப்ரீதி காரிதா சேஷாவஸ்தோசிதா சேஷ சேஷதைகரதி ரூப நித்ய கிங்கரோ பவாநி. (16)

*இந்த சூர்ணையினால், நித்யாநுபவத்தையும் நித்ய கைங்கர்யத்தையும் பெற்று வாழ்வேனாகவேணுமென்று ப்ரார்த்தித்தாராயிற்று. கீழ் இரண்டாவது சூர்ணையில் உள்ள வாக்கிய ஸந்நிவேசமே இங்குச் சிறிது மாறியிருக்கிற தத்தனை. விவரணம் அங்கே கண்டுகொள்வது. (பக்கம் 15, 16. காண்க)* (16)

[மூலம்] ஏவம்பூத மத் கைங்கர்ய ப்ராப்த்யுபாயதயா அவக்லுப்த ஸமஸ்த வஸ்துவிஹீநோபி, அநந்த தத்விரோதி பாபாக்ராந்தோபி, அநந்த மதபசாரயுக்தோபி, அநந்த மதீயாபசாரயுக்தோபி, அநந்தாஸஹ்யாபசார யுக்தோபி, ஏதத் கார்ய காரண பூதாநாதி விபரீதாஹங்கார விமூடாத்ம ஸ்வபாவோபி, ஏததுபய கார்ய காரண பூதாநாதி விபரீத வாஸநா ஸம்பத்தோபி, ஏததநுகுண ப்ரக்ருதி விசேஷ ஸம்பத்தோபி, ஏதந்மூலாத்யாத்மிக ஆதிபௌதிக ஆதிதைவிக ஸுகது:க்க தத்தேது ததிதரோபேக்ஷணீய விஷயாநுபவஜ்ஞாந ஸங்கோசரூப மச்சரணாரவிந்த யுகளைகாந்திகாத்யந்திக பரபக்தி பரஜ்ஞாந பரமபக்தி விக்ந ப்ரதிஹதோபி, யேந கேநாபி ப்ரகாரேண த்வய வக்தா த்வம் கேவலம் மதீயயைவ தயயா நிச்சேஷ விநஷ்ட ஸஹேதுக மச்சரணாரவிந்தயுகளை காந்திகாத்யந்திக பரபக்தி பரஜ்ஞாந பரம பக்தி விக்ந: மத்ப்ரஸாத லப்த மச்சரணாரவிந்த யுகளைகாந்தி காத்யந்திக பரபக்தி பரஜ்ஞாந பரமபக்தி; மத் ப்ரஸாதாதேவ ஸாக்ஷாத் க்ருத யதாவஸ்தித மத் ஸ்வரூப ரூப குணவிபூதி லீலோபகரண விஸ்தார:, அபரோக்ஷஸித்த மந்நியாம்யதா மத்தாஸ்யைக ஸ்வபாவாத்மஸ்வரூப:, மதேகாநுபவ:, மத்தாஸ்யைக ப்ரிய:, பரிபூர்ணாநவரத நித்ய விசததமாநந்யப்ர யோஜநாநவதிகாதிசய ப்ரிய மதநுபவஸ் த்வம் ததாவித மதநுபவ ஜநிதாநவதிகாதிசய ப்ரீதிகாரிதாசேஷாவஸ்தோசிதாசேஷ சேஷதைகரதிரூப நித்யகிங்கரோ பவ. (17.)

இனி இதற்குமேல் இந்த கத்யம் முடியுமளவும் எம் பெருமானுடைய ப்ரதிவசந ப்ரகாரத்தை அநுவதிக்கிற படி...... — ஏவம்பூத மத்கைங்கர்ய ப்ராப்த்யுபாயதயா அவக்லுப்த ஸமஸ்தவஸ்து விஹீநோபி — (இந்த சூர்ணை யின் நடுவில் " த்வம் கேவலம் மதீயயைவ தயயா " என்ற விடத்திலுள்ள த்வம் என்பது முதலில் யோஜித்துக் கொள்ளத்தக்கது, ஸ்ரீ ராமாநுஜரை நோக்கி ஸ்ரீ ரங்க நாதனுடைய ப்ரதிவசனம் இது. கீழில் சூர்ணையில் " நித்யகிங்கரோ பவாநி " என்று ப்ரார்த்தித்ததற்கு—அப் படியே நித்ய கிங்கரராகக் கடவீரென்று அநுக்ரஹம் செய்வது இந்த சூர்ணை. ' ஏவம்பூத ' என்றது கைங்கர் யத்திற்கு விசேஷணம். கீழ்ச் சூர்ணையில் எப்படிப்பட்ட கைங்கர்யம் ப்ரார்த்திக்கப்பட்டதோ அதை அநுவதிக்கிற படி. நீர் விரும்பினபடியே கைங்கரியம் பெறுவதற்கு எவ் வெவ்விதமான உபாயா நுஷ்டானங்கள் சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட் டிருக்கின்றனவோ அவை யொன்றும் உமக்கு இல்லையேயாகிலும் என்கை.

அநந்த தத்விரோதி பாப ஆக்ராந்தோபி — அப்படிப் பட்ட உபாயாநுஷ்டானங்களை இனிமேலும் ஸம்பாதித் துக் கொள்ள வொண்ணாதபடி அவற்றுக்கு விரோதிக ளான அபரிமித பாபங்கள் மலிந்திருக்கப் பெற்றீராகிலும்.

அநந்த மதபசாரயுக்தோபி — என்னளவில் பண்ணின அபசாரங்கள் அபரிமிதமாக இருக்கப் பெற்றீராகிலும்.

அநந்த மதீயாபசாரயுக்தோபி — அபரிமிதமான பாகவ தாபசாரங்கள் மலிந்திருக்கப் பெற்றீராகிலும்.

அநந்த அஸஹ்யாபசார யுக்தோபி — அபரிமிதமான அஸஹ்யாபசாரங்கள் மலிந்திருக்கப் பெற்றீராகிலும்.

ஏதத் கார்ய காரணபூத அநாதி விபரீதா ஹங்காரவி மூடாத்மஸ்வபாவோபி — இப்படிப்பட்ட அபசாரங்களி னால் உண்டாகுமதும் இவற்றை மேன்மேலு முண்டாக்கு வதுமான அநாதி விபரீதாஹங்காரத்தினால் மறைபட்ட ஆத்ம ஸ்வபாவத்தையுடை யீராகிலும்.

ஏததுபய கார்ய காரணபூத அநாதி விபரீத வாஸநாஸம் பத்தோபி — கீழ்ச் சொன்ன அபசாரமும் அஹங்காரமு மாகிற இரண்டுக்கும் கார்யமும் காரணமுமான அநாதி விபரீதவாஸனை சூழப்பெற்றிருந்தீராகிலும்.

ஏததநுகுண ப்ரக்ருதிவிசேஷ ஸம்பத்தோபி — கீழ்ச் சொன்ன அபசார அஹங்கார வாஸனைகளாகிற மூன்று க்கும் ஏற்ற ராஜஸதாமஸ ப்ரக்ருதியினாலே நன்கு கட்டுப் பட்டிருந்தீராகிலும்.

ஏதந்மூல ஆத்யாத்மிக ஆதிபௌதிக ஆதிதைவிக ஸுக துஃக்க தத்தேது ததிதர உபேக்ஷணீய விஷயாநுபவஜ்ஞாந ஸங்கோச ரூப மச்சரணாரவிந்த யுகளைகாந்திக ஆத்யந்திக பரபக்தி பரஜ்ஞாந பரமபக்தி விக்ந ப்ரதிஹதோபி — கீழ்ச் சொன்ன ப்ரக்ருதியடியாக வருகிற தாபத்ரய மென்னப் படுகிற ஸுகதுக்கங்க ளென்ன அவற்றுக்கு ஹேதுவான வை யென்ன அந்த ஸுகதுக்கங்களிற்காட்டிலும் வேறான உபேக்ஷிக்கக் கூடிய விஷயங்களென்ன, இவற்றின் அநு பவமும் ஜ்ஞாந ஸங்கோசமுமாகிய — என் திருவடியிணை களைப் பற்றின பரிபூர்ண பரபக்தி பரஜ்ஞான பரமபக்தி யிடையூறுகளினால் கெடுதல்களடைந் திருந்தீராகிலும்.

யேந கேநாபி ப்ரகாரேண த்வய வக்தா த்வம்—ஏதேனு மொருபடி த்வய மந்த்ரத்தைச் சொன்னவரான நீர்,

கேவலம் மதீயயைவ தயயா — என்னுடைய நிர்ஹேதுக க்ருபையினாலேயே, நிச்சேஷ விநஷ்ட ஸஹேதுக மச்சரணாரவிந்த யுகளைகாந்திகாத்யந்திக பரபக்தி பரஜ்ஞாந பரமபக்தி விக்ந:— *என்னுடைய திருவடித்தாமரை யிணைகளைப்பற்றிய பரபக்தி பரஜ்ஞாந பரம பக்திகளின் இடையூறுகளெல்லாம் நிர்மூலமாக [அவற்றின் காரணங்களோடுங் கூட] நன்கு கழியப்பெற்றவராகி,*

மத் ப்ரஸாதலப்த மச்சரணாரவிந்த யுகளைகாந்திக ஆத்யந்திக பரபக்தி பரஜ்ஞாந பரமபக்தி: — *என்திருவடித் தாமரையிணைகளைப் பற்றிய பரபக்தி பரஜ்ஞாந பரமபக்திகள் என்னுடைய அநுக்ரஹமடியாக உண்டாகப்பெற்றவராய்,*

மத் ப்ரஸாதாத் ஏவ — *என்னுடைய அநுக்ரஹமடியாகவே,* ஸாக்ஷாத் க்ருத யதாவஸ்தித மத்ஸ்வரூபரூப குணவிபூதி லீலோபகரண விஸ்தார :— *என்னுடைய ஸ்வரூபம் ரூபம் திருக்குணங்கள் நித்யவிபூதி லீலா விபூதி ஆகிய இவற்றின் விஸ்தாரங்களை உள்ளபடி ஸாக்ஷாத்கரிக்கப் பெற்றவராய்,*

அபரோக்ஷஸித்த மந்நியாம்யதா மத்தாஸ்யைக ஸ்வபாவாத்ம ஸ்வரூப :— *எனக்கே நியாம்யமாயும் எனக்கே அடிமைப்பட்டு மிருக்கையாகிற இயற்கையான ஆத்ம ஸ்வரூபத்தை உள்ளபடி உணரப் பெற்றவராய்,*

மதேகாநுபவ : — *என்னொருவனையே அநுபவிக்க விரும்பியவராய்,*

மத்தாஸ்யைகப்ரிய: — *எனக்குக் கைங்கரியம் பண்ணுவதொன்றிலேயே ஊற்ற முடையவராய்,*

பரிபூர்ணாநவரத நித்யவிசததம அநந்ய ப்ரயோஜந அநவதி காதிசய ப்ரிய மதநுபவஸ் த்வம் — *பரிபூர்ணமாயும் இடைவிடாததாயும் எப்போதும் மிக விசதமாயும் ப்ரயோஜனாந்தரப் பற்று அற்றதாயும் பரமப்ரியமாயு மிருக்கிற என்னநுபவத்தை யுடையீராய்,*

ததாவித மதநுபவஜநித அநவதிகாதிசய ப்ரீதிகாரித அசேஷாவஸ்தோசித அசேஷ சேஷதைக ரதிரூப நித்ய கிங்கரோ பவ – *அப்படிப்பட்ட என்னநுபவத்தினால் உண்டு பண்ணப்பட்ட மிகச் சிறந்த உகப்பினாலாகிய ஸர்வாவஸ்தோசித ஸகல கைங்கரியங்களிலும் ஆசை கொண்டிருக்கும் அடியவராக ஆகக்கடவீர். (என்று அநுக்ரஹித்தபடி.)*

இந்த சூர்ணையின் *பரமதாற்பரியமாவது - எனக்கு நித்ய கைங்கரியம் செய்து களிக்க வேணு மென்றாசை கொண்ட நீர் அதற்குரிய ஒரு உபாயத்திலும் அந்வய மற்றிருந்தீராகிலும், அந்த உபாயம் இனிமேலும் நிஷ்பந்நமாக முடியாதபடி விரோதிகளான பாபங்கள் கூடு பூரித் திருந்தீராகிலும், பகவதபசார பாகவதாபசார அஸஹ்யாபசாரங்கள் மலிந்திருந்தீராகிலும், பரபக்தி பரஜ்ஞாந பரமபக்திகள் விளையாமைக்குறுப்பான இடையூறுகள் பல மலிந்திருந்தீராகிலும், நீர் ஆர்த்த ப்ரபந்நராகியோ த்ருப்த ப்ரபந்நராகியோ த்வயமந்த்ரத்தை அநுஸந்தித்தீராதலால் என்னுடைய நிர்ஹேதுக க்ருபையினாலேயே இடையூறுகளெல்லாம் நீங்கப்பெற்று பரபக்தி பரஜ்ஞாந பரம பக்திகள் புஷ்கலமாகப்பெற்று என்னுடைய ஸ்வரூபரூபகுண விபூதிகளை ஸாக்ஷாத் கரிக்கப் பெற்று உம்முடைய ஸ்வரூபத்தையும் நன்கு தெளியப்பெற்று என்னையே அநுபவிப்பவராய் எனக்கே தொண்டு செய்ப*

வாய் வாழக்கடவீரென்று எம்பெருமான் அநுக்ரஹித்தருளினபடியை அருளிச் செய்தாராயிற்று. (17.)

(மூலம்) ஏவம் பூ⁴தோஸி ॥ 18 ॥

[ஏவம்பூதோஸி.] (18)

இதுவும் நம் பெருமாளுடைய திருமுகப்பாசுரம். கீழே நான் அநுக்ரஹித்தபடியே ஆகத் தொடங்கிவிட்டீர் என்றபடி. "ஏவம் ஸித்³த⁴ உபாய க்ருதார்த²ஏவாஸீதி ஸ்தி²ர:" என்பது தேசிக பாஷ்ய ஸூக்தி. (18)

(மூலம்) ஆத்⁴யாத்மிகாதி⁴பௌ⁴திகாதி⁴தை³விக து³:க²விக்⁴ந க³ந்த⁴ ரஹிதஸ்த்வம் த்³வயமர்த²ாநுஸந்தா⁴நேந ஸஹ ஸதை³வம் வக்தா யாவச்ச²ரீரபாதம் அத்ரைவ ஸ்ரீரங்கே³ ஸுக²மாஸ்வ ॥ 19.

[ஆத்யாதமிகாதி பௌதிகா திதைவிக துஃக்க விக்ந கந்த ரஹிதஸ் த்வம் த்வயமர்த்தாநுஸந்தாநேந ஸஹ ஸதா ஏவம் வக்தா யாவச்சரீரபாதம் அத்ரைவ ஸ்ரீரங்கே ஸுகமாஸ்வ.] (கக)

* ஆற்றங்கரை வாழ்மரம் போலஞ்சுகின்றேன் * என்றும் * இருபாடெரி கொள்ளியினுள் எறும்பே போலுருகா நிற்கு மென்னுள்ளம் * என்றும் * வெள்ளத்திடைப் பட்ட நரியினம் போலே உள்ளந் துளங்காநிற்பன் * என்றும் அஞ்ச வேண்டும்படியான இவ்விருள்தருமாஞாலத்திலே நிரபாயமாகக் காலக்ஷேபம் செய்ய வழியேது? என்கிற சங்கைக்குப் பரிஹாரமாக இந்த சூர்ணையும் எம்பெருமானுடைய திருமுகப் பாசுரமாகத் திருவவதரிக்கிறபடி.

தாபத்ரய ஜனித துக்கமாகிற இடையூறு சிறிதுமில்லாதவராய் த்வயமந்த்ரத்தை அர்த்தாநுஸந்தானத்தோடுகூட எப்போதும் இப்படியே சொல்லிக் கொண்டிருப்பவராய் இவ்வுடல் தொலையும் வரை இந்தத் திருவரங்கம் பெரிய கோயிலிலேயே இனிது வாழக்கடவீரென்று நம்பெருமாள் சோதிவாய் திறந்தருளிச் செய்தபடி. இங்கு ஸ்ரீரங்கத்தைச் சொன்னது உகந்தருளின நிலங்களெல்லாவற்றுக்கும் உபலக்ஷணமென்று தேசிகன் திருவுள்ளம் பற்றுகிறார். (19)

(மூலம்) [illegible] ॥ 20 ॥

[சரீரபாதஸமயே து கேவலம் மதீயயைவ தயயா அதிப்ரபுத்தோ மாமேவாவலோகயந் அப்ரச்யுத பூர்வ ஸம்ஸ்காரமநோரத: ஜீர்ண மிவ வஸ்த்ரம் ஸுகேந இமாம் ப்ரக்ருதிம் ஸ்தூல ஸூக்ஷ்ம ரூபாம் விஸ்ருஜ்ய, ததாநீமேவ மத் ப்ரஸாத லப்த மச்சரணாரவிந்த யுகளை காந்திகாத்யந்திக பரபக்தி பரஜ்ஞாந பரமபக்திக்ருத பரிபூர்ணாநவரத நித்ய விசததமாநந்ய ப்ரயோஜநாநவதிகாதிசய ப்ரிய மதநுபவ ஜநிதா நவதிகாதிசய

**ப்ரீதிகாரிதா சேஷாவஸ்தோசிதா சேஷ சேஷதைக ரதிரூப நித்ய கிங்கரோ பவிஷ்யஸி. (20)**

*ப்ரபந்நனுக்கு பூர்வக்ருத்ய மென்றும் உத்தரக்ருத்ய மென்றும் இரண்டுண்டு. பூர்வக்ருத்யம் கீழே பரக்கச் சொல்லிற்று. உத்தரக்ருத்யம் சொல்லுகிற திப்போது. இவ்வுடல் சரியும் நிலைமை எப்படிப்பட்டது? பரமபலன் கைபுகுவது எப்போது? என்கிற கேள்விகளுக்கு விடையிறுக்கிறது இங்கு. இதுவும் பெரிய பெருமாளுடைய திருவாக்கநுவாதம்.*

சரீரபாதஸமயே து — *உடல் சரிந்து போம்போது,*

கேவலம் மதீயயைவ தயயா அதிப்ரபுத்த:— *என்னுடைய இயற்கையான அருளாலேயே மிகவும் சிறந்த ஞான முடையீராய்,*

மாம் ஏவ அவலோகயந் — *இதற்குமுன் சிந்திக்கப் பட்ட என்னையே சிந்திப்பவராகி,*

அப்ரச்யுத பூர்வஸம்ஸ்கார மநோரத: — *"எம்பெருமானே எனக்குப் பரமப்ராப்யபூதன்" என்கிற ஸம்ஸகாரமும் ப்ராப்தியிலுண்டான பாரிப்பும் குன்றாதவராகி,*

ஸ்தூல ஸூக்ஷ்ம ரூபாம் இமாம் ப்ரக்ருதிம் ஜீர்ணம் வஸ்த்ரமிவ ஸுகேந விஸ்ருஜ்ய -- *ஸ்தூலமும் ஸூக்ஷ்மமுமான இந்த ப்ரக்ருதியை பழைய வஸ்த்ரத்தை விடுமா போலே எளிதாக விட்டு,*

ததாநீம் ஏவ – *அப்போதே [தாமதமின்றி],*

மத்ப்ரஸாத லப்த மச்சரணாரவிந்தயுகளைகாந்திகாத்யந்திக பரபக்தி பரஜ்ஞாந பரமபக்தி க்ருத பரிபூர்ண ந வ ர த

நித்ய விசததமாநந்ய ப்ரயோஜநா நவதிகாதிசய ப்ரிய மதநுப வஜநிதா நவதிகாதிசய ப்ரீதிகாரித அசேஷாவஸ்தோசிதா சேஷ சேஷதைகரதிரூப நித்ய கிங்கர: பவிஷ்யஸி – என்னுடைய அநுக்ரஹத்தினாலேயே ................நித்ய கைங்கர்ய ஸாம்ராஜ்யத்தைப் பெற்றவராகப் போகிறீர்.—கீழே "பாரமார்த்திக பகவச்சரணாரவிந்த யுகளைகாந்தி காத்யந்திக" என்கிற இரண்டாவது சூர்ணையில் அருளிச் செய்துள்ள ஸ்ரீஸூக்திகளே இங்குமுள்ளனவதலால் விரிவான வுரையை அங்கே * (பக்கம் 15, 16ல்) காண்க.

(மூலம்) मा ते भूदत्र संशयः ॥ 21.

[மா தே பூதத்ர ஸம்சய:] (21)

"நித்யகிங்கரோ பவிஷ்யஸி" என்று அநுக்ரஹித்த விவ்விஷயத்தில் உமக்கு ஸம்சயம் வர்த்திக்க வேண்டாவென்கிறது. *ப்ரஸக்தஸ்யைவ ஹி ப்ரதிஷேத:* என்றிறே நியாயமிருப்பது; இங்கு ஸந்தேஹ ப்ரஸக்தி யுண்டோ வென்னில்; உலகில் க்ஷுத்ர பலன்களைப் பெறுவதற்கும் மிகவும் கனத்த உபாயாநுஷ்டானங்கள் காணாநின்றோம்; மிகமிகக் கனத்த பேறாகிய மோக்ஷ புருஷார்த்தம் பெறுவதற்கு - துஷ்கரத்வத்தில் இனியிதுக்கு அவ்வருகில்லை யென்னலாம்படி பரம துஷ்கரமான உபாயம் இருக்கவேண்டாவோ? மிகவும் ஸுகரமான இந்த ந்யாஸ மாத்ரத்தினாலே பேறு தப்பாதென்னில், இது கண்துடைக்கிற வார்த்தையாயிருக்குமோ வென்று சிலர்க்கு சங்கையுண்டாகக் கூடுமாகையாலே அவர்களுக்கும் தெளிவு பிறப்பிக்கவேண்டி எம்பெருமானாரை அபதேசித்து * மா தே பூத் அத்ர ஸம்சய: * என்று சோதிவாய் திறந்து அருளிச் செய்கிறபடி. (21)

(மூலம்) * 𑌅𑌨𑍃𑌤𑌂 𑌨𑍋𑌕𑍍𑌤𑌪𑍂𑌰𑍍𑌵𑌂 𑌮𑍇 𑌨 𑌚 𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑍇 𑌕𑌦𑌾𑌚
𑌨। * 𑌰𑌾𑌮𑍋 𑌦𑍍𑌵𑌿𑌰𑍍𑌨𑌾𑌭𑌿𑌭𑌾𑌷𑌤𑍇 * 𑌸𑌕𑍃𑌦𑍇𑌵
𑌪𑍍𑌰𑌪𑌨𑍍𑌨𑌾𑌯 𑌤𑌵𑌾𑌸𑍍𑌮𑍀𑌤𑌿 𑌚 𑌯𑌾𑌚𑌤𑍇 । 𑌅𑌭𑌯𑌂
𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑍇𑌭𑍍𑌯𑍋 𑌦𑌦𑌾𑌮𑍍𑌯𑍇𑌤𑌦𑍍𑌵𑍍𑌰𑌤𑌂 𑌮𑌮 ॥ *
𑌸𑌰𑍍𑌵𑌧𑌰𑍍𑌮𑌾𑌨𑍍 𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌜𑍍𑌯 𑌮𑌾𑌮𑍇𑌕𑌂 𑌶𑌰𑌣𑌂
𑌵𑍍𑌰𑌜 । 𑌅𑌹𑌂 𑌤𑍍𑌵𑌾 𑌸𑌰𑍍𑌵𑌪𑌾𑌪𑍇𑌭𑍍𑌯𑍋 𑌮𑍋𑌕𑍍𑌷
𑌯𑌿𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 𑌮𑌾 𑌶𑍁𑌚𑌃 ॥ *𑌇𑌤𑌿 𑌮𑌯𑍈𑌵 𑌹𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌂 ॥22॥

[*அந்ருதம் நோக்த பூர்வம் மே ந ச வக்ஷ்யே கதாசந * * ராமோ த்விர்நாபிபாஷதே * ஸக்ருதேவ ப்ரபந்நாய தவாஸ் மீதி ச யாசதே, அபயம் ஸர்வ பூதேப்யோ ததாமி ஏதத் வ்ரதம் மம * ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ, அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மா சுச: * இதி மயைவ ஹி உக்தம்.] (22)

* மா தே பூத் அத்ர ஸம்சய: * என்று கீழே அருளிச் செய்ததையே நன்கு நிலைநாட்டுதற்காக இந்த சூர்ணையும் மேல் சூர்ணையும் அவதரிக்கின்றன. என்னுடைய நித்ய கைங்கர்ய ப்ராப்தியில் உமக்கு ஸந்தேஹம் வர்த்திக்கு மாகில் நான் ஏற்கெனவே பேசி வைத்திருக்கின்ற வார்த் தைகள் விரோதிக்குமே; அவை பொய்யாகுமே. "தேசு டைய தேவர் திருவரங்கச் செல்வனார் பேசி யிருப்பனகள் பேர்க்கவும் போரவே" என்று உம்முடைய திருத்தங் கையாரும் சொல்லி வைத்தாளே ; ஆகவே என்னுடைய வார்த்தையை நீர் உபச்சந்தமாத்திரமாகக் கொள்ளா தொழிய வேணு மென்று நம்பெருமாள் அருளிச் செய்த படி. இது வரையில் ஒரு காலும் நான் பொய் சொல்லிற் றில்லை; இனிமேல் சொல்லப் போகிறது மில்லை யென்று

க்ருஷ்ணுவதாரத்திலே சொன்னேன்; இராமன் வாயிலே இரண்டு பேச்சு வாரா தென்று ராமாவதாரத்திலே சொன்னேன்; அன்றியும், ராமாவதாரத்திலே கடற்கரையிலே விபீஷணுழ்வானை வ்யாஜீகரித்து * ஸக்ருதேவ ப்ரபந்நாய * என்கிற சரம ச்லோகமுரைத்தேன் ; க்ருஷ்ணுவதாரத்திலே திருத்தேர்த்தட்டிலே அர்ஜுநனை வ்யாஜீகரித்து * ஸர்வதர்மாந் பரித்யஜ்ய * என்கிற சரமச்லோகமுரைத்தேன் ; * ஸக்ருதேவவில் * ஏதத வ்ரதம் மம * என்பது உயிரான வார்த்தை. * ஸர்வதர்மானில் * மா சுச: * என்பது உயிரான வார்த்தை. ஆக இப்படிச் சொல்லியிருக்கிற நான் இன்ருகப் பொய்யனுக மாட்டேன் காணும் என்று திண்மை பெறுத்தினபடி. (22.)

(மூலம்) 𑌅𑌤𑌸𑍍𑌤𑍍𑌵𑌂 𑌤𑌵 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌤𑍋 𑌮𑌜𑍍𑌜𑍍𑌞𑌾𑌨𑌦𑌰𑍍𑌶𑌨
𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌿𑌷𑍁 𑌨𑌿𑌸𑍍𑌸𑌂𑌶𑌯 𑌸𑍁𑌖𑌮𑌾𑌸𑍍𑌵 ॥ 23 ॥

[அதஸ் த்வம் தவ தத்வதோ மத்ஜ்ஞாந தர்சந ப்ராப்திஷு நிஸ்ஸம்சயஸ் ஸுக மாஸ்வ.] (23)

கீழ்ச் சொன்னதையே திடப்படுத்தி யருளிச் செய்கிறவிது ஸந்தோஷாதிசயத்திற்காகவாயிற்று. இதுவும் பகவத் வாக்யம். அத: — ஸத்ய வாதியும் ஸத்யவ்ரதனுமான நான் சொன்ன வார்த்தை மிகவும் விச்வஸிக்கத் தகுந்ததாகையினுலே, த்வம் – ப்ராமாணிகரான நீர், தவ – என்னுலே ஸ்வீகரிக்கப்பட்ட ஸகல ஸுங்களையு முடையவரான உம்முடைய, தத்த்வத: மத் ஜ்ஞாந தர்சந ப்ராப்திஷு— உள்ளபடி என்னை யறிவது, காண்பது, நித்ய கைங்கர்யம் பண்ணுவது ஆகிற விவற்றில், நிஸ்ஸம்சய:-சங்கா களங்க லேசமு மில்லாதவராய், ஸுகம் ஆஸ்வ - இனிது வாழ்ந்

திருக்கக் கடவீர் என்று எம்பெருமானாரை நோக்கி எம்பெருமான் அருளிச் செய்த திருமுகப்பாசுரம். (23)

24. இதற்கு மேல் * 𑌅𑌨𑍍𑌤𑍍𑌯𑌕𑌾𑌲𑍇 𑌸𑍍𑌮𑍃𑌤𑌿𑌰𑍍𑌯𑌾 𑌤𑍁 𑌤𑌵 𑌕𑍈𑌙𑍍𑌕𑌰𑍍𑌯𑌕𑌾𑌰𑌿𑌤𑌾 । 𑌤𑌾𑌮𑍇𑌨𑌾𑌂 𑌭𑌗𑌵𑌨𑍍𑌨𑌦𑍍𑌯 𑌕𑍍𑌰𑌿𑌯𑌮𑌾𑌣𑌾𑌂 𑌕𑍁𑌰𑍁𑌷𑍍𑌵 𑌮𑍇 ॥ * அந்த்யகாலே ஸ்ம்ருதிர் யா து தவ கைங்கர்ய காரிதா, தாமேநாம் பகவந் அத்ய க்ரியமாணாம் குருஷ்வ மே. * என்றொரு ச்லோகம் அநுஸந்திக்கப்பட்டு வருகிறது. ஆனால், பெரிய வாச்சான் பிள்ளையோ ச்ருத ப்ரகாசிகாசார்யரோ தேசிகனோ இதற்கு வியாக்கியானம் செய்தருளக்காண்கின்றிலோம்......................

எம்பெருமானா ரருளிச் செய்த கத்யத்ரயத்தில்

சரணாகதி கத்யம் முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளே சரணம். எம்பெருமானார் திருவடிகளே சரணம். ஜீயர் திருவடிகளே சரணம்.

---

ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதி பயங்கரம்
அண்ணங்கராசாரியர் இயற்றிய
**கத்ய பாவப்ரகாசிகையில்**
முதற்பகுதி முற்றுப்பெற்றது.

---

ஸ்ரீ

# சரணாகதி கத்யத்தின் தாத்பர்ய ஸாரம்.

இந்த கத்யத்திலுள்ள சூர்ணைகள் 24. இவற்றுக்கு ப்ரதிபதார்த்தமும் விசேஷார்த்தமும் எழுதப்பட்டிருந்தாலும் ஸாரமான தாற்பரியம் கதைபோல் நெஞ்சில் படிவதற்காக இந்த தாத்பர்ய ஸாரம் எழுதப்படுகிறது.

சூர்ணை. 1. மேல் * அகில ஹேய ப்ரத்யநீகே த்யாதியான ஐந்தாவது சூர்ணையில் ஸ்வாமி தாம் அநுஸந்திக்கப் போகிற பகவச்சரணாகதி நன்கு நிறைவேறுவதற்காக முந்துறமுன்னம் பெரிய பிராட்டியார் பக்கலிலே புருஷகார ப்ரபத்தி செய்யப்படுகிறது.

2. பெரிய பிராட்டியாரை நோக்கிச் செய்த புருஷகார ப்ரபத்தி இன்னதற்காக வென்பது வ்யக்தமாகச் சொல்லப்படுகிறது.

3, 4. அங்ஙனமேயாயிடுக வென்று பெரிய பிராட்டியார் அநுக்ரஹம் செய்தருளினமை சொல்லிற்று.

5. எம்பெருமானுடைய திவ்யாத்மஸ்வரூப திவ்ய மங்கள விக்ரஹங்களின் வைலக்ஷண்யத்தையும், கல்யாண குணயோகத்தையும, திவ்ய பூஷண விசிஷ்டதையையும், திவ்யாயுதச் சேர்த்தியையும், திவ்ய மஹிஷீ ஸாஹித்யத்தையும், நித்யஸூரிகளோட்டைச் சேர்த்தியையும், நித்ய விபூதி நாயகத்வத்தையும், லீலா விபூதி நிர்வாஹகத்வத்தை

யும், மற்றும் ஸத்யகாமத்வ ஸத்ய ஸங்கல்பத்வாதி குண விசேஷங்களுடைமையையும் பரக்கச் சொல்லியேத்தி எம் பெருமானுடைய திருவடித் தாமரையிணைகளிலே சரணுகதி செய்தமை சொல்லிற்று.

6, 7, 8, 9. த்வயாநு ஸந்தானம் செய்தருளி, புராண ச்லோகங்களிரண்டையும் கீதையிலுள்ள மூன்று ச்லோ கங்களையும் அநுஸந்தித்தாராயிற்று.

10, 11. காலத்ரயத்திலும் கரண த்ரயத்தாலும் வினை யும் ஸமஸ்தாபசாரங்களையும் பொறுத்தருள வேணுமென்று ப்ரார்த்தித்தது. 10-ல் நிஷித்தாசரண க்ஷமா ப்ரார்த் தனை; 11-ல் காம்யாசரண க்ஷமா ப்ரார்த்தனை.

12. கீதையில் * மம மாயா துரத்யயா * என்றும் * மாமேவ யே ப்ரபத்யந்தே மாயா மேதாம் தரந்தி தே * என்றும் சொல்லியுள்ளதை யநுஸரித்து மாயையை மடி விக்க வேணுமென்று ப்ரார்த்தித்தது.

13. கீதையில் மூன்று ச்லோகங்களை யெடுத்துக் காட்டி அவற்றில் சொல்லப்பட்ட ஜ்ஞானம் தமக்கு உண்டாகவேணுமென்று பிரார்த்தித்தது.

14. கீதையில் மூன்றிடங்களில் சொல்லப்பட்ட பர பக்தி தமக்கு விளைய வேணுமென்று ப்ரார்த்தித்தது.

15. பரபக்தி பரஜ்ஞாந பரம பக்திகளே வடி வெடுத்தவனுக அடியேனைச் செய்தருள வேணுமென்று பிரார்த்தித்தது.

16. அந்த பரபக்தி பரஜ்ஞாந பரம பக்திகளால் விலக்ஷண பகவதநுபவம் விளைந்து அவ்வனுபவ பரீவாஹ ரூபமாக நித்யகைங்கர்யருசி விளையவேணுமென்றது.

[இனி இதற்குமேல் கத்யம் முழுவதும் எம்பெருமானுடைய ப்ரதிவசநம்.]

17. வாரீர் இராமானுசரே!, எனக்கு நித்ய கைங்கரியஞ்செய்து களிக்க விரும்பிய நீர் அதற்கு உரிய ஒரு உபாயத்திலும் அந்வயமற்றிருந்தீராகிலும், அந்த உபாயம் இனிமேலும் நிஷ்பந்நமாகக் கூடாதபடி விரோதிகளான பாபங்கள் நிரம்பி யிருந்தீராகிலும், ஸகலவிதமான அபசாரங்களும் மலிந்திருந்தீராகிலும், பரபக்தி பரஜ்ஞாந பரம பக்திகள் விளையாமைக் குறைப்பான இடையூறுகள் பல மலிந்திருந்தீராகிலும், நீர் ஆர்த்த ப்ரபந்நராகியோ த்ருப்த ப்ரபந்நராகியோ த்வய மந்த்ரத்தை அநுஸந்தித்தீராதலால் என்னுடைய நிர் ஹேதுக க்ருபையினாலேயே இடையூறுகளெல்லாம் நீங்கப்பெற்று பரபக்தி பரஜ்ஞான பரம பக்திகள் புஷ்கலமாகப் பெற்று என்னுடைய ஸ்வரூப ரூபகுண விபூதிகளை ஸாக்ஷாத்கரிக்கப் பெற்று உம்முடைய ஸ்வ ரூபத்தையும் நன்கு தெளியப் பெற்று என்னையே அநுபவிப்பவராய் எனக்கே தொண்டு செய்பவராய் வாழக் கடவீரென்று எம்பெருமான் அநுக்ரஹித்தருளினபடி சொல்லிற்று.

18. இங்ஙனே யாகப் புகுந்தீரென்று எம்பெருமான் அநுக்ரஹித்தமைசொல்லிற்று.

19. தாபத்ரய லேசமுமற்று அர்த்தாநுஸந்தானத்தோடு த்வயோச்சாரணம் செய்துகொண்டு இவ்வுடல் விழுந்தளவும் இந்தத் திருவரங்கம் பெரிய கோயிலிலேயே இனிது வாழக்கடவீரென்று அநுக்ரஹித்தமை சொல்லிற்று.

20. இவ்வுடல்சரிந்து போங்காலத்தில் சிறந்த நன்மைகளைப் பெற்று நித்ய கைங்கர்ய நிரதராகப் போகிறீரென்று அநுக்ரஹித்தமை சொல்லிற்று.

21. இதில் சிறிதும் ஸந்தேஹம் வேண்டாவென்று தெளிவித்தமை சொல்லிற்று.

22. தன்னுடைய திருவாக்குப் பழுதுபடாதென்று எம்பெருமான் மூதலித்தமை சொல்லிற்று.

23. கீழ்ப் பண்ணின அபய ப்ரதாநத்தைத் திடப்படுத்தி நிகமித்தது. [ஆக இவ்வளவும் எம்பெருமானுடைய ப்ரதிவசனம்.]

24. அந்திமஸ்ம்ருதி வேணுமென்று திருவுள்ளமாகில் *அப்போதைக்கிப்போதே சொல்லிவைத்தேன்* என்கிற கட்டளையிலே கொண்டருளவேணுமென்று ஸ்வாமி தாம் பிரார்த்தித்து கத்யத்தை நிகமித்தாராயிற்று.

**சரணுகதி கத்ய தாத்பர்யஸாரம் முற்றுப்பெற்றது.**

## முக்கியமான ஓர் பிழை திருத்தம்.

சரணுகதி கத்யத்தில் "சரீரபாத ஸமயே து" என்றுரம்பிக்கிற இருபதாவது சூர்ணையில் (பக்கம் 66-ல்)......அநவதிகாதிசயப்ரிய மதநுபவஸ் த்வம் ததாவித மதநுபவ ஜநிதாநவதிகாதிசய ப்ரீதிகாரிதா சேஷாவஸ் தோசித......" என்றிருக்க வேணும். "மதநுபவஸ்த்வம் ததாவித" என்ற விது மூலத்திலும் மேல் ப்ரதிகோபாதாநத்திலும் விட்டுப் போயிற்று; திருத்திக் கொள்க.

ஸ்ரீ:

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

# கத்யத்ரயத்தில் இரண்டாவது கத்யம்

# ஸ்ரீரங்க கத்யம்.

---

### தனியன்.

*𑌚𑌿𑌦𑌚𑌿𑌤𑍍𑌪𑌰𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌨𑌾𑌂 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌯𑌾𑌥𑌾𑌰𑍍𑌥𑍍𑌯𑌵𑍇𑌦𑌿𑌨𑍇 ।*
*𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌾𑌯 𑌮𑍁𑌨𑌯𑍇 𑌨𑌮𑍋 𑌮𑌮 𑌗𑌰𑍀𑌯𑌸𑍇 ॥*

[சிதசித்பரதத்வாநாம் தத்வ யாதார்த்த்யவேதிநே,
ராமாநுஜாய முநயே நமோ மம கரீயஸே.]

சித் அசித் பரதத்வாநாம்—சேதநன் அசேதநம் ஈச்வரன் ஆகிறமூன்று தத்துவங்களினுடைய, தத்வ யாதார்த்த்ய வேதிநே — உண்மையை உள்ளபடியறிந்தவரான, மம கரீயஸே – எனக்கு உத்தம குருவான, ராமாநுஜாய முநயே —எம்பெருமானார்க்கு, நம: – நமஸ்காரமாகுக.

இந்த இரண்டாவது கத்யத்திற்கு ஸ்ரீரங்ககத்ய மென்கிற வ்யவஹாரமும் மிதகத்ய மென்கிற வ்யவஹாரமுமுள்ளது. இங்கு முதல் சூர்ணையில் "ஸ்ரீரங்கசாயிநம்" என்று அருளிச் செய்ததுகொண்டும், முடிவில் "ஸ்ரீரங்கநாத! மமநாத! நமோஸ்து தே" என்றருளிச் செய்ததுகொண்டும் ஸ்ரீரங்ககத்ய மென்று வ்யவஹரிக்கலாயிற்றென்று கொள்ளவேணும். முந்தின கத்யம் பெரிதாயிருக்கையாலே அத்தைப் பெரிய கத்ய மென்றும் ப்ருஹத் கத்யமென்றும், இது சிறிதாயிருக்கையாலே இதனைச் சிறிய கத்யமென்றும் மித கத்ய மென்றும் முன்னோர்கள் பணித்தபடி.

முந்தின கத்யத்தில் விரிவாக அருளிச்செய்யப்பட்ட விஷயமே இதில் சுருங்கவருளிச் செய்யப்படுகிறதாயிற்று. முன் கத்யம் போலவே இந்த கத்யமும் த்வயவிவரணமே யாயிருக்கிறது. ஸம்க்ஷேபவிஸ்தரங்களினால் வாசி காண்க. இதில் முதல் சூர்ணை கைங்கர்ய ப்ரார்த்தநாபரமான உத்தர கண்டத்தின் விவரணமாகவும், இரண்டாவது சூர்ணை சரணவரண ப்ரதர்சநபரமான பூர்வகண்டத்தின் விவரணமாகவும் அவதரிக்கின்றது.

அவதாரிகை முற்றிற்று.

---

(மூலம்) 𑌸𑍍𑌵𑌾𑌧𑍀𑌨 𑌤𑍍𑌰𑌿𑌵𑌿𑌧 𑌚𑍇𑌤𑌨𑌾𑌚𑍇𑌤𑌨 𑌸𑍍𑌵𑌰𑍂𑌪 𑌸𑍍𑌥𑌿𑌤𑌿 𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌭𑍇𑌦𑌂 𑌕𑍍𑌲𑍇𑌶𑌕𑌰𑍍𑌮𑌾𑌦𑍍𑌯𑌶𑍇𑌷 𑌦𑍋𑌷𑌾𑌸𑌂𑌸𑍍𑌪𑍃𑌷𑍍𑌟𑌂 𑌸𑍍𑌵𑌾𑌭𑌾𑌵𑌿𑌕𑌾𑌨𑌵𑌧𑌿𑌕𑌾𑌤𑌿𑌶𑌯𑌜𑍍𑌞𑌾𑌨𑌬𑌲𑍈𑌶𑍍𑌵𑌰𑍍𑌯𑌵𑍀𑌰𑍍𑌯𑌶𑌕𑍍𑌤𑌿𑌤𑍇𑌜𑌸𑍍𑌸𑍌𑌶𑍀𑌲𑍍𑌯𑌵𑌾𑌤𑍍𑌸𑌲𑍍𑌯𑌮𑌾𑌰𑍍𑌦𑌵𑌾𑌰𑍍𑌜𑌵 𑌸𑍌𑌹𑌾𑌰𑍍𑌦𑌸𑌾𑌮𑍍𑌯𑌕𑌾𑌰𑍁𑌣𑍍𑌯𑌮𑌾𑌧𑍁𑌰𑍍𑌯𑌗𑌾𑌮𑍍𑌭𑍀𑌰𑍍𑌯𑍌𑌦𑌾𑌰𑍍𑌯𑌚𑌾𑌤𑍁𑌰𑍍𑌯𑌸𑍍𑌥𑍈𑌰𑍍𑌯𑌧𑍈𑌰𑍍𑌯𑌶𑍌𑌰𑍍𑌯𑌪𑌰𑌾𑌕𑍍𑌰𑌮𑌸𑌤𑍍𑌯𑌕𑌾𑌮𑌸𑌤𑍍𑌯𑌸𑌂𑌕𑌲𑍍𑌪𑌕𑍃𑌤𑌿𑌤𑍍𑌵𑌕𑍃𑌤𑌜𑍍𑌞𑌤𑌾𑌦𑍍𑌯𑌸𑌂𑌖𑍍𑌯𑍇𑌯 𑌕𑌲𑍍𑌯𑌾𑌣 𑌗𑍁𑌣𑌗𑌣𑍌𑌘𑌮𑌹𑌾𑌰𑍍𑌣𑌵𑌂 𑌪𑌰𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌭𑍂𑌤𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋𑌤𑍍𑌤𑌮𑌂 𑌶𑍍𑌰𑍀𑌰𑌙𑍍𑌗𑌶𑌾𑌯𑌿𑌨𑌂 𑌅𑌸𑍍𑌮𑌤𑍍𑌸𑍍𑌵𑌾𑌮𑌿𑌨𑌂 𑌪𑍍𑌰𑌬𑍁𑌦𑍍𑌧𑌨𑌿𑌤𑍍𑌯𑌨𑌿𑌯𑌾𑌮𑍍𑌯𑌨𑌿𑌤𑍍𑌯𑌦𑌾𑌸𑍍𑌯𑍈𑌕𑌰𑌸𑌾𑌤𑍍𑌮𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑍋𑌽𑌹𑌂 𑌤𑌦𑍇𑌕𑌾𑌨𑍁𑌭𑌵𑌸𑍍𑌤𑌦𑍇𑌕𑌪𑍍𑌰𑌿𑌯𑌃 𑌪𑌰𑌿𑌪𑍂𑌰𑍍𑌣𑌂 𑌭𑌗𑌵𑌨𑍍𑌤𑌂 𑌵𑌿𑌶𑌦𑌤𑌮𑌾𑌨𑍁𑌭𑌵𑍇𑌨 𑌨𑌿𑌰𑌨𑍍𑌤𑌰𑌮𑌨𑍁𑌭𑍂𑌯 𑌤𑌦𑌨𑍁𑌭𑌵𑌜𑌨𑌿𑌤𑌾𑌨𑌵𑌧𑌿𑌕𑌾𑌤𑌿𑌶𑌯 𑌪𑍍𑌰𑍀𑌤𑌿𑌕𑌾𑌰𑌿𑌤𑌾𑌶𑍇𑌷𑌾𑌵𑌸𑍍𑌥𑍋𑌚𑌿𑌤𑌾𑌶𑍇𑌷 𑌶𑍇𑌷𑌤𑍈𑌕𑌰𑌤𑌿𑌰𑍂𑌪𑌨𑌿𑌤𑍍𑌯𑌕𑌿𑌂𑌕𑌰𑍋 𑌭𑌵𑌾𑌨𑌿 ॥ (1)

[ஸ்வாதீந த்ரிவித சேதநாசேதநஸ்வரூப ஸ்திதி ப்ரவ்ருத்தி பேதம் க்லேச கர்மாத்ய சேஷ தோஷா ஸம்ஸ்ப்ருஷ்டம் ஸ்வாபாவிகாநவதி காதிசய ஜ்ஞாநபல ஐச்வர்ய வீர்யசக்தி தேஜஸ் ஸௌசீல்ய வாத்ஸல்ய மார்தவார்ஜவ ஸௌஹார்த்த ஸாம்ய காருண்ய மாதுர்யகாம்பீர் யௌதார்ய சாதுர்யஸ் தைர்யதைர்ய சௌர்ய பராக்ரம ஸத்யகாம ஸத்ய ஸங்கல்ப க்ருதித்வக்ருதஜ்ஞதாத் யஸங்கயேய கல்யாண குணகணௌக மஹார்ணவம் பரப்ரஹ்மபூதம் புருஷோத்தமம் ஸ்ரீரங்கசாயிநம் அஸ்மத்ஸ்வாமிநம் ப்ரபுத்த நித்யநியாம்ய நித்யதாஸ் யைகர ஸாத்மஸ்வபாவோஹம் ததேகாநுபவஸ் ததேக ப்ரிய: பரிபூர் ணம் பகவந்தம் விசததமாநுபவேந நிரந்தரமநுபூய, ததநுபவ ஜநிதாநவதிகாதிசய ப்ரீதிகாரிதா சேஷாவஸ்தோசிதா சேஷ சேஷதைகரதிரூப நித்யகிங்கரோ பவாநி. (1)

மூன்று வகைப்பட்ட சேதநா சேதநங்களின் ஸ்வ ரூப மென்ன ரக்ஷணமென்ன ப்ரவ்ருத்தி நிவ்ருத்திக ளென்ன இவை தன்னதீனமாக இருக்கப்பெற்ற. (இது முதலான த்விதீயாந்த விசேஷணங்க ளெல்லாம் மேலே பகவந்தம் என்கிற விசேஷ்யத்தில் அந்வயித்து "விசதத மாநுபவேந நிரந்தர மநுபூய" என்றிணங்கக் கடவது.) திருவாய் மொழியில் * உயர்வற வுயர்நல மென்கிற முதற்பதிகத்தில் * நாமவனிவனுவன்* அவரவர் தமதமது* * நின்றனரிருந்தனர் * என்று அடைவேயுள்ள மூன்று பாசுரங்களையும் தழுவி இந்த முதல் விசேஷணமருளிச் செய்தபடி. * நாமவனிவ னென்கிறபாட்டில் சேதநா சேதநங்களின் ஸ்வரூபம் எம்பெருமானுடைய அதீன மென்றது. * அவரவர் தமதமதென்கிற பாட்டிலே அவற்றின் ரக்ஷணமும் எம்பெருமானுக்கதீன மென்றது.

* நின்றனரிருந்தன ரென்கிற பாட்டில் அவற்றின் ப்ர வ்ருத்தி நிவ்ருத்திகளும் எம்பெருமானதீன மென்றது. சேதநர்கள் பத்தர்களென்றும் முக்தர்களென்றும் நித்யர்க ளென்றும் மூவகைப் பட்டிருப்பதுபற்றி "த்ரிவித சேதந" என்றது. அசேதநமானது த்ரிகுணமென்றும் காலமென்றும் சுத்தஸத்வ மென்றும் மூவகைப் பட்டிருப் பது பற்றி "த்ரிவித அசேதந" என்றது. த்ரிவித என் கிற விசேஷணம் சேதந மாத்திரத்தில் அந்வயித்து அசேத நத்தில் அந்வயியாமலு மிருக்கலா மென்று தேசிகன் திரு வுள்ளம் பற்றுகிறார். சூர்ணையின் முடிவிலுள்ள பேத பதம் ஸ்வரூபம் முதலிய மூன்றிலும் அந்வயித்து ஸ்வரூப பேதம் ஸ்திதி பேதம் ப்ரவ்ருத்தி பேதம் என்று கொள்வ தற்கும் பாங்காகும். ஒவ்வொன்றிலும் அவாந்தர பேதங்கள் பலவுண்டாதல் அறிக.

க்லேச கர்மாத்யசேஷ தோஷ அஸம்ஸ்ப்ருஷ்டம் — அவித்யை முதலான ஐந்து க்லேசங்க ளென்ன, புண்ய பாப ரூபமான கரும மென்ன இவை முதலான எவ்வித தோஷ ஸம்பந்தமுமில்லாத; — சேதநா சேதநங்கள் சரீர மாய் எம்பெருமான் சரீரியாயிருக்கிறுைகில் சரீர ஸம்பந் தத்தினாலாகும் தோஷம் சரீரிக்கும் வாராதோ வென்ன, வாராதென்கிறது இந்த விசேஷணத்தினால். க்லேசங்க ளாவன — அவித்யா அஸ்மிதா அபிநிவேசம் ராகம் த்வே ஷம் என்று ஐந்தாகச் சொல்லப்பட்டவை. அவற்றின் காரியமான புண்ய பாபங்கள் கருமங்களாகும். ஆதி பதத்தினால் விபாகம் முதலியன கொள்க.

ஸ்வாபாவிக அநவதிகாதிசய ஜ்ஞாநபலைச்வர்ய வீர்ய சக்தி தேஜஸ் ஸௌசீல்ய வாத்ஸல்ய மார்தவார்ஜவ ஸௌ

ஹார்த ஸாம்ய காருண்ய மாதுர்ய காம்பீர் யௌதார்ய சாதுர்ய ஸ்தைர்ய தைர்ய சௌர்ய பராக்ரம ஸத்ய காம ஸத்யஸங்கல்ப க்ருதித்வ க்ருதஜ்ஞதாத்யஸங்க்யேய கல்யாண குணகணௌக மஹார்ணவம் — *ஸ்வாபாவிகங்களாயும் உயர்வற வுயர்ந்தவையாயு மிருக்கிற ஷாட்குண்யம் முதலிய திருக்குணத் திரள்களுக்குக் கடல் போன்ற. (கீழ் சரணாகதிகத்யத்தில் 22-ஆம் பக்கத்தில் இந்த சூர்ணிகையே விஸியாக வந்திருக்கின்றது. வியாக்கியான விரிவு அங்கே காணத்தக்கது.)*

பரப்ரஹ்ம பூதம் புருஷோத்தமம் — *பரப்ரஹ்ம சப்தத்தாலும் புருஷோத்தம சப்தத்தாலும் வேதாந்தங்களிலே ப்ரஸித்தனை.*

ஸ்ரீரங்கசாயிநம் — *திருவரங்கம் பெரிய கோயிலிலே அஸ்மதாதிகளும் கண்ணாலே கண்டநுபவிக்கலாம்படி கண்வளர்ந்தருளுகிற.*

அஸ்மத் ஸ்வாமிநம் பரிபூர்ணம் பகவந்தம் — *எமக்கு ஸ்வாமியாய் ஒன்றிலுங் குறைவில்லாத எம்பெருமானை. (இதற்கு அநுபூய என்கிற ல்யப்போடே அந்வயம்.)*

ப்ரபுத்த நித்ய நியாம்ய நித்ய தாஸ்யைகரஸ ஆத்மஸ்வபாவ: அஹம் — *நித்ய நியாம்யமாய் நித்ய தாஸ்யைகரஸமான ஆத்ம ஸ்வபாவத்தை நன்கு அறிந்துகொண்டவனை அடியேன். ப்ரபுத்த என்றது — நன்றாக அறியப்பட்ட என்றபடி. நித்ய நியாம்யமா யிருக்கிறபடியும் நித்ய தாஸ்யைகரஸமாயிருக்கிறபடியுமாகிற தன்மை நன்கறியப்பட்டதாகச் சொன்னாராயிற்று.* [illegible] *மில்லாதபடி அறியப்படுகையே நன்கு*

அறியப்படுகையாம். இவ்வாத்மா எம்பெருமானொருவ னுக்கே நியாம்யனும் தாஸனுமானவன் என்று நன்றாக அறிந்து கொண்ட நான் என்றதாயிற்று.

ததேகாநுபவ: ததேகப்ரிய:— பகவத் விஷய மொன்றே ஞானத்திற்கும் பக்திக்கும் விஷயமாகப் பெற் றவனாய்.

விசததமாநுபவேந நிரந்தரமநுபூய — மிகவும் விசதமாக இடை வீடின்றி யநுபவித்து,

ததநுபவஜநித அநவதிகாதிசய ப்ரீதிகாரித அசேஷாவஸ் தோசித அசேஷ சேஷைதைகரதிரூப நித்ய கிங்கர: பவாநி — அவ்வநுபவத்தினால் விளைவிக்கப்பட்ட மிகச் சிறந்த வுகப் பினால் செய்விக்கப்பட்ட ஸர்வாவஸ்தோசித ஸர்வவித கைங்கரியங்களிலும் ஊற்றத்தோடு கூடியிருக்கையாகிற நித்ய கைங்கரியத்திலே நிரதனாகக்கடவேன்.

சேஷைதைகரதி: என்பது பஹுவ்ரீஹியாகி நித்ய கிங்கரனுக்கு விசேஷணமாகிறது. அசேஷமான அடிமை களிலும் நன்கு ஈடுபட்ட நித்ய கிங்கரனாக ஆகக்கடவே னென்றபடி. ஆக இவ்வளவும் த்வயத்தில் உபேயத்திலே நோக்கான உத்தரகண்டம் விவரிக்கப் பட்டதாயிற்று. (1)

இனி உபாயத்தில் நோக்கான பூர்வகண்டத்தை விவ ரிக்கப் புகுந்து, அதில் உத்தம புருஷனில் விவக்ஷிதமான ஆகிஞ் சந்யமாகிற ப்ரபத்யதிகா்ர விசேஷத்தையும் கார்ப்பண்யமாகிற அங்கத்தையும் விவரிக்கிறார் ஸ்வாத் மநித்ய நியாம்ய..........என்று தொடங்கி இரண்டாவது சூர்ணையினால்.

[மூலம்] 2. ஸ்வாத்ம நித்ய நியாம்ய நித்ய தாஸ்யை கரஸ ஆத்மஸ்வ பாவாநு ஸந்தாந பூர்வக பகவதநவதிகாதிசய ஸ்வாம்யா த்யகில குணகணாநுபவ ஜநித அநவதிகாதிசய ப்ரீதி காரித அசேஷாவ ஸ்தோசித அசேஷ சேஷதைகரதி ரூப நித்ய கைங்கர்ய ப்ராப்த்யுபாய (பூத) பக்தி தது பாய ஸம்யக் ஜ்ஞாந ததுபாய ஸமீசீந க்ரியா தததுகுண ஸாத்விக தாஸ்திக்யாதி ஸமஸ்தாத்ம குண விஹீந:—

ஸ்வாத்ம நித்ய நியாம்ய— அடியேன் எப்பொழுதும் நியமிக்கத் தகுந்தவனா யிருக்கை யென்ன,

நித்யதாஸ்ய— எப்பொழுதும் அடிமை செய்து கொண்டே யிருக்கை யென்ன,

ஏகரஸ— ஆகிய இவற்றையே ஸாரமாகவுடைய,

ஆத்மஸ்வபாவ அநுஸந்தாந பூர்வக— ஸ்வஸ்வ பாவத்தை யநுஸந்தித்து அதனாலுண்டான, பகவத் அநவதி காதிசய ஸ்வாம்யாதி அகில குணகணாநுபவஜநித— எப்போதும் தனக்கே நியமிக்கத் தகுந்தவனா யிருக்கை யென்ன, நித்ய கைங்கர்யத்திலேயே ஊன்றி யிருக்கை யென்ன இப்படிப்பட்ட ஸ்வஸ்வ பாவத்தை யநுஸந்தித்துக் கொண்டு, எம்பெருமானது சிறந்த ஸ்வாமித்வம் முதலிய ஸகல குண கணங்களையும் அநுபவிப்பதனாலுண்டான, ப்ரீதிகாரித—மிகுந்த வுகப்பினால் செய்விக்கப்பட்ட, அசேஷாவஸ் தோசித அசேஷ சேஷதைகரதி ரூப நித்ய கைங்கர்ய ப்ராப்த்யுபாய பக்தி—ஸர்வாவஸ் தோசித ஸர்வவித கைங்கர்யங்களிலும் ப்ராவண்யங் கொண்டிருக்கை யாகிற நித்ய கைங்கர்யத்திற்கு உபாயமான பக்தி யென்ன, ததுபாய ஸம்யக் ஜ்ஞாந— அதற்கு முபாயமான பரிபக்வஜ்

ஞாநமென்ன, ததுபாய ஸமீசீந க்ரியா — அதற்கு முபாய மான நல்ல கர்மயோக மென்ன, ததநுகுண ஸாத்விகதா ஆஸ்திக்யாதி ஸமஸ்த ஆத்மகுண விஹீந:—அதற்கு முறுப் பான ஸாத்விகத்வம் ஆஸ்திக்யம் முதலான ஆத்ம குணங் களென்ன ஆகிய இவை சிறிது மில்லாதவனுய்,

துருத்தராநந்த தத்விபர்யய ஜ்ஞாந க்ரியாநுகுண அநாதி பாபவாஸநா மஹார்ணவாந்தர் நிமக்ந:— கீழ்ச் சொன்ன ஸம்யக் ஜ்ஞாந ஸமீசீந க்ரியைகளுக்கு மாருன விபரீதஜ் ஞாந விபரீத க்ரியைகளுக்கு உறுப்பான அநாதி பாப வாஸனையாகிற கடக்க முடியாத பெருங் கடலினுள்ளே மூழ்கிக் கிடப்பவனுய்,

திலதைலவத் தாருவஹ்நிவத் துர்விவேச த்ரிகுணக்ஷண க்ஷரண ஸ்வபாவ அசேதந ப்ரக்ருதி வ்யாப்திரூப துரத்யய பகவந்மாயா திரோஹித ஸ்வப்ரகாச :—எள்ளில் எண்ணெய் போலவும் கட்டையில் நெருப்புப் போலவும் ஸாதாரண மாகப் பிரிக்க முடியாததாய் ஸத்வரஜஸ் தமஸ்ஸுக்களை யும் ஸததபரிணுமித்வத்தையும் இயல்வாகவுடைத்தாய் ஜட ரூபமான ப்ரக்ருதியிலே அவர்ஜநீயமாயிருந்துள்ள ஸம் பந்தத்தை யுடைத்தாய் கடக்கவரிதான பகவந்மாயை யினுல் மறைபட்ட ஸ்வப்ரகாசத்தை யுடையனுய்,

அநாத்ய வித்யா ஸஞ்சித அநந்த அசக்யவிஸ்ரம்ஸந கர்ம பாச ப்ரக்ரதித :— அநாதியான அஜ்ஞாநத்தாலே திரட்டப் பட்டதாய் எண்ணிறந்ததாய் ஒருவராலும் அவிழ்க்க முடி யாதபடி யிருந்துள்ள புண்ய பாபரூப கர்மமாகிற கயிற்று லே கட்டுண்டவனுய்,

அநாகத அநந்த கால ஸமீக்ஷயாபி அத்ருஷ்ட ஸந்தா ரோபாய: அஹம் — எத்தனை காலம் பார்த்தாலும் ஸம்ஸார

*நிஸ்தாரணோபாயம் இன்னதென்று அறியப் பெறுதிருந்துள்ளவனான அடியேன் ;*

நிகில ஜந்து ஜாத சரண்ய !— *ஸமஸ்த ப்ராணி ஸமூஹங்களுக்கும் சரண்யனானவனே!,*

ஸ்ரீமந்நாராயண ! — *பெரிய பிராட்டியாரோடே கூடியிருந்துள்ள நாராயணனே !*

தவ சரணாரவிந்த யுகளம் சரணம் ப்ரபத்யே— *உனது திருவடித்தாமரையிணையை உபாயமாகப் பற்றுகிறேன்.*(2)

(மூலம்) 3. **ஏவமவஸ்திதஸ்யாபி அர்த்தித்வ மாத்ரேண பரமகாருணிகோ பகவாந் ஸ்வாநுபவ ப்ரீத்யோபநீத ஐகாந்திகாத்யந்திக நித்ய கைங்கர்யைகரதிரூப நித்யதாஸ்யம் தாஸ்யதீதி விச்வாஸபூர்வகம் பகவந்தம் நித்ய கிங்கரதாம் ப்ரார்த்தயே.** (3.)

ஏவம் அவஸ்திதஸ்யாபி— *கீழ்ச் சூர்ணையில் விரிவாகச் சொன்னபடியே ஆகிஞ்சந்யாதிகளே வடிவெடுத்திருக்கின்ற வெனக்கும்,*

பரமகாருணிக: பகவாந் — *பேரருளாளனான எம்பெருமான்,*

அர்த்தித்வ மாத்ரேண—*என் பக்கலுள்ள இரப்பையே கொண்டு,*

ஸ்வாநுபவப்ரீத்யா உபநீத ஐகாந்திகாத்யந்திக நித்யகைங்கர்யைகரதி ரூப நித்யதாஸ்யம் தாஸ்யதி இதி விச்வாஸ பூர்வகம்—*தன்னையநுபவிக்கு முகப்பினாலுண்டாவதாய் ஒருபடிப்பட்டதாய் முடிவின்றிக்கேயிருந்துள்ள அடிமையி*

*லேயே ஊற்ற முற்றிருக்கையாகிற நித்ய கைங்கர்யத்தை யருளப்போகிறு னென்கிற நம்பிக்கையுடன்,*

பகவந்தம் நித்ய கிங்கரதாம் ப்ரார்த்தயே — *எம்பெருமானிடத்தில் நித்ய கைங்கர்யத்தை ப்ரார்த்திக்கிறேன்.* (3.)

(மூலம்) *** தவாநுபூதிஸம்பூதப்ரீதிகாரித தாஸதாம்,**
**தேஹி மே க்ருபயா நாத ! நஜாநே கதிமந்யதா, 4**
**ஸர்வாவஸ்தோசிதாசேஷசேஷைதைகரதிஸ் தவ,**
**பவேயம் புண்டரீகாக்ஷ த்வமேவைவம் குருஷ்வ மாம்*. 5**

*கீழே தம்முடைய பாசுரத்தாலே பேற்றை ப்ரார்த்தித்தார்; இப்போது, இதிஹாஸச்லோகமிரண்டு கொண்டு ப்ரார்த்திக்கிறுர். இவ்விரண்டு ச்லோகங்களுக்கும் இதிஹாஸபுராணங்களிலே ஆகரம் கண்டு கொள்வது.*

*எம்பெருமானே ! உன்னையநுபவித்து அதனுலுண்டான வுகப்பினுல் விளையும் கைங்கரியத்தைப் பரமக்ருபையோடு அடியேனுக்குத் தந்தருள வேணும். வேறு புகலறிகின்றிலேன். செந்தாமரைக் கண்ணனே ! ஸர்வாவஸ்தைகளிலும் உனக்குச் செய்யக்கூடிய ஸகலவித கைங்கர்யங்களிலும் அடியேன் ருசியுடையேனும்படி நீதானே செய்தருளவேணும் என்பது இவ்விரண்டு ச்லோகங்களின் கருத்து.* (4, 5)

(மூலம்) **ஏவம்பூத தத்வயாதாத்ம்யாவபோத ததிச்சாரஹிதஸ்யாபி ஏதது்ச்சாரணமாத்ராவலம்பநேந உச்யமாநார்த்த பரமார்த்த நிஷ்டம் மே மநஸ் த்வமேவ அத்யைவ காரய.** (6.)

ஸ்ரீரங்கநாதனே! உன்னுடைய திருவருளால் அடியேன் அதிகார பூர்த்தி பெற்றவனாக நினைத்திருக்கிறேன்; ஒரு கால் அப்படிப்பட்ட அதிகாரபூர்த்தி இல்லையேயாகிலும் அடியேனிடத்தில் கிடைக்கின்ற உக்தி வ்யாஜத்தைக் கொண்டு நீயே சேஷ பூரணம் செய்துகொள்ள வேணுமென்று ப்ரார்த்திப்பது இந்த சூர்ணையின் கருத்து.

ஏவம் பூத தத்வயாதாத்ம்யாவ போத ததிச்சா ரஹிதஸ்யாபி-இப்படி மிகச் சிறந்த புருஷார்த்தத்தின் உண்மை நிலையை யறிந்துகொள்வதும் அறிந்துகொள்ள விருப்பமும் மில்லாதவனாயிருந்தாலும்,

ஏததுச்சாரண மாத்ர அவலம்பநேந — என் வாய் மொழிதன்னையே கொண்டு, மே மந: — என்னுடைய உள்ளத்தை, உச்யமாநார்த்த பரமார்த்த நிஷ்டம் — உபாயோபேயங்களின் உண்மை யுணர்ச்சி பெற்றதாக,

த்வம் ஏவ அத்ய ஏவ காரய – நீதானே இப்போதே செய்வித்தருள வேணும்.

குரு என்னாதே காரய என்றது 'அதுவு மவனதின்னருளே' என்ற பரமார்த்தத்தைக் காட்டுதற்காம். (6)

7. அபாரகருணாம்புதே! —கரை கடந்த கருணைக் கடலே!,

அநாலோசித விசேஷ அசேஷ லோக சரண்ய! — குண தோஷ நிரூபணம்பண்ணமாட்டாமே ஸகல ஜகத்துக்கும் சரண்யனானவனே!,

ப்ரணத ஆர்த்திஹர! – அடிபணிந்தாருடைய ஆர்த்திகளைப் போக்குமவனே!

ஆச்ரித வாத்ஸல்ய ஏக மஹோததே ! — அடியார் பக்கலுண்டான வாத்ஸல்யத்திற்கு முக்கியமான மஹாஸமுத்ரமே !,

அநவரத விதித நிகிலபூத ஜாத யாதாத்ம்ய !- ஸகலபூத ஸமூஹங்களினுடையவும் உண்மையை எப்போது மறிந்துள்ளவனே !,

ஸத்யகாம ! – அவாப்த ஸமஸ்த காமனே !,

ஸத்யஸங்கல்ப ! – நினைத்தது செய்து தலைக்கட்ட வல்லவனே !,

ஆபத்ஸக ! ஆபத் பந்துவானவனே !,
காகுத்ஸ்த ! – ககுத்ஸ்தவம்சப்ரஸூதனானவனே !,
ஸ்ரீமந்நாராயண !— திருமாலே !,
புருஷோத்தம ! – பரமபுருஷனே !,
ஸ்ரீரங்கநாத ! – ஸ்ரீரங்கநாதனே !,
மம நாத ! – எம்பெருமானே !,

தே நம: அஸ்து – தேவரீர்க்கே சேஷமான இவ்வாத்ம வஸ்து தேவரீர்க்கே போக்யமாய்த் தலைக்கட்ட வேணு மென்கை. (7)

ஸ்ரீரங்க கத்ய மென்கிற

**மித கத்யம்**

முற்றுப் பெற்றது.

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

ஸ்ரீகாஞ்சீ அண்ணங்கராசாரியர் இயற்றிய
கத்யபாவப்ரகாசிகையில்
ஸ்ரீரங்ககத்யவியாக்யானம் முற்றிற்று.

ஸ்ரீ:
எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

# கத்யத்ரயத்தில் மூன்றாவது கத்யம்
# ஸ்ரீ வைகுண்ட கத்யம்.

## அவதாரிகை.

எம்பெருமானார் தம்முடைய திருவுள்ளத்தில் அறுதியிட்ட அர்த்தம் பனைநிழல் போலே தம் மொருவரளவிலே நின்றிடாமே கற்பகக்காவின் நிழல்போலே உலகுக் கெல்லாம் பயன்பட வேண்டுமென்று கருதி யருளினவராதலால் ஊரும் நாடுமுலகமும் தம்மைப்போலேயாம்படி உபாயோபேயங்களை நிஷ்கர்ஷித்தருளிச் செய்து பரோபதேசத்தில் இழிகிறார் – இந்த வைகுண்டகத்ய முகத்தாலே. பெரியகத்யமான சரணாகதி கத்யத்திலே பொதுவாக எம்பெருமானை நோக்கின ஸ்வப்ரார்த்தனையாக அருளிச் செய்தார். சிறிய கத்யமான ஸ்ரீரங்ககத்யத்திலே, அந்த ப்ரார்த்தனையை ஸௌலப்யத்துக்கு எல்லை நிலமான பெரிய பெருமாள் விஷயமாக அருளிச்செய்தார். இதில் பரத்வத்துக்கு எல்லை நிலமான ஸ்ரீ வைகுண்டநாதன் விஷயமாக, பிறரைநோக்கி கர்த்தவ்யோபதேசம் பண்ணியருளுகிறார். இதில் உபாயமான அம்சத்தைச் சுருங்க அருளிச் செய்து உபேயமான அம்சத்தை மிகவும் பரக்க அருளிச்செய்கிறார். இந்த கத்யம் ஆறு சூர்ணையாயிருக்கும். அவற்றின் தாத்பர்யஸாரம் வருமாறு.

சூர்ணை—1. எம்பெருமானுடைய ஸ்வரூபரூபகுண விபூதி வைலக்ஷண்யத்தையும் தன்னுடைய நிலைமையையும்

அநுஸந்தித்து அப்பெருமானுடைய ஸௌசீல்யம் முதலிய திருக்குணங்களை பற்றாசாக அவன் திருவடிகளிலே சரணம் புகவேணுமென்கிறது.

2. பேற்றுக்கு ஒருகால் அநுஸந்திக்கையே போதுமாயிருக்கச் செய்தேயும் நெஞ்சு வேறொன்றில் செல்லாமைக்கும் காலக்ஷேபத்துக்குமாக நித்யாநுஸந்தானம் பண்ணவேணுமென்கிறது.

3. இவ்வதிகாரி அர்ச்சிராதிமார்க்கமாகச் சென்று ப்ரக்ருதி மண்டலத்தைக் கடக்கும்படியையும் கடந்து சென்று புகுகிற நித்ய விபூதியின் வைபவத்தையும் அந்த தேசவிசேஷத்தினுடைய பண்பையும் அங்குள்ள அலங்காரங்களையும் அப்படிப்பட்ட விடத்தில் உலகுடைய நாச்சிமாரும் ஸர்வேச்வரனுமாயெழுந்தருளி யிருக்குமிருப்பையும் அந்த நாச்சிமார்க்கு அநுபாவ்யமான வடிவழகையும் திவ்யாபரணச் சேர்த்தியையும் திவ்யாயுத வர்க்கத்தையும் வழுவிலாவடிமை செய்யும் நித்யஸூரி பரிஷத்தையும் அவர்களுடைய நித்ய கைங்கரியத்திற்கு இலக்காகியெழுந்தருளியிருக்கு மிருப்பையும் அநுஸந்தித்து இப்பேற்றை நாம் எப்போது பெறக்கடவோமென்று பாரித்து அந்தப் பாரிப்பின்படியே சென்றுகிட்டி 'பெருமானே! என்னால் நித்ய கைங்கர்யம் கொண்டருளவேணும்' என்று ப்ரார்த்தித்து ஆத்மஸமர்ப்பணம் பண்ணுவானென்கிறது.

4. ஸ்வாபேக்ஷிதத்தின்படி எம்பெருமானாலே ஸ்வீகரிக்கப்பட்டவனைக் கொண்டு அநுகூல வ்ருத்தியைப் பண்ணிக் கொண்டிருப்பனென்கிறது.

12

5. இப்புருஷார்த்தத்தை நெடுங்கால மிழந்திருந்த இழவுதீர அநந்யபரதை யற்று இமையாத கண்ணினுலைக் கொண்டு ஸதாதர்சனம் பண்ணிக்கொண் டிருக்கும்படியைச் சொல்லுகிறது.

6. இப்படி வந்து சேர்ந்த விவனை எம்பெருமான் வினவிக் குளிரக் கடாக்ஷித்துத் திருவடிகளைத் தலைமேலே வைக்க, அடிசூடுமரசு பெற்று நித்யாநந்தசாலியாயிருக்கு மிருப்பைச் சொல்லுகிறது...........

ஸ்ரீ வைகுண்ட கத்யதாத்பர்யஸாரம் முற்றிற்று.

---

(மூலம்) 𑌯𑌾𑌮𑍁𑌨𑌾𑌰𑍍𑌯𑌸𑍁𑌧𑌾𑌮𑍍𑌭𑍋𑌧𑌿𑌮𑌵𑌗𑌾𑌹𑍍𑌯 𑌯𑌥𑌾𑌮𑌤𑌿 ।
𑌆𑌦𑌾𑌯 𑌭𑌕𑍍𑌤𑌿𑌯𑍋𑌗𑌾𑌖𑍍𑌯𑌂 𑌰𑌤𑍍𑌨𑌂 𑌸𑌨𑍍𑌦𑌰𑍍𑌶𑌯𑌾𑌮𑍍𑌯𑌹𑌮𑍍 ॥

[யாமுநார்ய ஸுதாம்போதி மவகாஹ்ய யதாமதி,
ஆதாய பக்தி யோகாக்யம் ரத்நம் ஸந்தர்சயா ம்யஹம்.]

(கருத்து.) ஆளவந்தா ராகிற அமுதக் கடலிலே படிந்து குடைந்தாடி பக்தியோக மாகிற ரத்நத்தை யதாமதி யெடுத்து அன்பர்களுக்கு அநுபவிக்கக் கொடுக்கிறேனென்கை. இங்கு பக்தியோக மென்றது, ஸாத்ய பக்தியான ப்ரபத்தியையே சொன்னபடியாம்; இதில் மேலே "தத் பாதாம்புஜ த்வய ப்ரபத்தே ரந்யத் ந மே கல்ப கோடி ஸஹஸ்ரேணாபி ஸாதநமஸ்தீதி மந்வாந:" என்றருளிச் செய்திருப்பதோடு பொருந்துகைக்காக....

ஆளவந்தாருடைய திருவருளடியாகக் கிடைத்த அர்த்தங்களை அன்பர்களுக்கு நித்யாநுஸந்தேயமாக வெளியிடுகிறேனென்பது இந்தச்லோகத்தின் தேர்ந்த கருத்து.

---

# ஸ்ரீ வைகுண்ட கத்யாரம்பம்.

(மூலம்) ஸ்வாதீந த்ரிவித சேதநாசேதந ஸ்வரூப ஸ்திதி ப்ரவ்ருத்தி பேதம் க்லேஶ கர்மாத்யஶேஷ தோஷாஸம்ஸ்ப்ருஷ்டம் ஸ்வாபாவிகாநவதிகாதிஶய ஜ்ஞாந பலைஶ்வர்ய வீர்ய ஶக்தி தேஜ: ப்ரப்ருத்யஸங்க்யேய கல்யாண குண கணௌக மஹார்ணவம் பரமபுருஷம் பகவந்தம் நாராயணம் ஸ்வாமித்வேந ஸுஹ்ருத்த்வேந குருத்வேந ச பரிக்ருஹ்ய ஐகாந்திகாத்யந்திக தத்பாதாம்புஜ த்வய பரிசர்யைக மநோரத:, தத்ப்ராப்தயே ச தத்பாதாம்புஜ த்வய ப்ரபத்தேரந்யந்ந மே கல்பகோடி ஸஹஸ்ரேணாபி ஸாதநமஸ்தீதி மந்வாந:, தஸ்யைவ பகவதோ நாராயணஸ்ய அகில ஸத்த்வ தயைக ஸாகரஸ்ய அநாலோசித குணாகுணாகண்ட ஜநாநுகூலாமர்யாத ஶீலவத: ஸ்வாபாவிகாநவதிகாதிஶய குணவத்தயா தேவ திர்யங்மநுஷ்யாத்யகில ஜந ஹ்ருதயாநந்தநஸ்ய ஆஶ்ரித வாத்ஸல்யைக ஜலதே: பக்தஜந ஸம்ஶ்லேஷைக போகஸ்ய நித்ய ஜ்ஞாந க்ரியைஶ்வர்யாதி போக ஸாமக்ரீ ஸம்ருத்தஸ்ய மஹாவிபூதே: ஶ்ரீமச்சரணாரவிந்த யுகளம் அநந்யாத்ம ஸஞ்ஜீவநேந தத்கத ஸர்வபாவேந ஶரணமநுவ்ரஜேத். (1)

**1.** ஸ்வாதீநத்ரிவித சேதநாசேதந ஸ்வரூப ஸ்திதி ப்ரவ்ருத்தி பேதம் — மூன்றுவகைப்பட்ட சேதநா சேதநங்களின் ஸ்வரூபமென்ன ரக்ஷணமென்ன ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளென்ன இவை தன்னதீனமாக இருக்கப்பெற்ற. (இதற்கு விசேஷ விவரணம் பக்கம் 78, 79ல் காண்க).

க்லேச கர்மாதி அசேஷ தோஷ அஸம்ஸ்ப்ருஷ்டம் — *அவித்யை முதலான ஐந்து க்லேசங்களென்ன, புண்ய பாப ரூபமான கருமமென்ன, இவை முதலான எவ்வித தோஷ ஸம்பந்தமுமில்லாத. (பக்கம் 79 காண்க.)*

ஸ்வாபாவிக அநவதிகாதிசயஜ்ஞாநபல ஐச்வர்ய வீர்ய சக்தி தேஜ: ப்ரப்ருதி அஸங்க்யேய கல்யாண குண கணௌக மஹார்ணவம் — *ஸ்வாபாவிகங்களாயும் *உயர்வறவுயர்ந்தவையாயுமிருக்கிற ஷாட்குண்யம் முதலிய திருக்குணத் திரள்களுக்குக் கடல் போன்ற. (பக்கம் 22 காண்க.)*

பரமபுருஷம் பகவந்தம் நாராயணம் — *புருஷோத்தமனாய் ஷாட்குண்ய பரிபூர்ணனான ஸ்ரீமந்நாராயணனை,*

ஸ்வாமித்வேந ஸுஹ்ருத்த்வேந குருத்வேந ச பரிக்ருஹ்ய — *சேஷியாகவும் நேசனாகவும் ஆசார்யனாகவும் ஏற்றுக் கொண்டு,*

ஐகாந்திக ஆத்யந்திக தத்பாதாம்புஜத்வய பரிசர்யைக மநோரத: — *எப்போதும் அப்பெருமானுடைய திருவடித் தாமரையிணைகளைப் பற்றிய கைங்கர்ய மொன்றே செய்ய வேணுமென்கிற பாரிப்பையுடையனாய்,*

தத் ப்ராப்தயே ச தத்பாதாம்புஜத்வய ப்ரபத்தேரந்யத் ந மே கல்ப கோடி ஸஹஸ்ரேணாபி ஸாதநமஸ்தீதி மந்வாந: — *அந்த கைங்கரியத்தைப் பெறுதற்கு கல்பகோடி ஸஹஸ்ரமானாலும் அப்பெருமானுடைய திருவடித் தாமரையிணைகளையே நம்பியிருப்பதிற் காட்டிலும் வேறொன்று எனக்கு உபாயமாக இல்லையென்று எண்ணினவனாய்,*

அகிலஸத்வதயைக ஸாகரஸ்ய — *எல்லா ப்ராணிகளிடத்தும் கருணைக் கடலாயும்,*

அநாலோசித குணகுண அகண்டஜநாநுகூல அமர்யாத சீலவத :— குணதோஷங்களில் ஆராய்ச்சியின்றிக்கே ஸகல ஜனங்களுக்கும் அநுகூலமாயிருக்கிற எல்லை கடந்த சீல குணத்தை யுடையவனையும்,

ஸ்வாபாவிகாநவதிகாதிசய குணவத்தயா தேவதிர்யங் மநுஷ்யாதி அகில ஜந ஹ்ருதயாநந்தநஸ்ய — இயற்கை யாகவே உயர்வறவுயர்நல முடையவனுகையாலே. தேவர்கள் திர்யக்குகள் மனிசர் முதலான ஸகல ப்ராணிகளுடை யவும் உள்ளத்தை உகப்பிக்குமவனையும்,

ஆச்ரித வாத்ஸல்யைக ஜலதே :— அடியார்கள் திறத்து வாத்ஸல்யக் கடலாயும்,

பக்த ஜந ஸம்ச்லேஷைக போகஸ்ய — பக்தஜனங்களுடன் கலந்து பரிமாறுவதொன்றையே தனக்குப் பேரின்பமாகக் கொண்டவனையும்,

நித்ய ஜ்ஞாநக்ரியைச்வர்ய போகஸாமக்ரீஸம்ருத்தஸ்ய— நித்யமும் ஸகல விஷயகமாயுள்ள ஞான மென்ன, தனக்கு லீலையாயிருக்கிற க்ரியைகளென்ன, ஐச்வர்ய மென்ன இவைபோல்வனவான போகஸாமக்ரிகள் நிரம்பி யிருக்கப் பெற்றவனையும்,

மஹாவிபூதே : — மிகச் சிறந்த விபூதியையுடைய னையுமிருக்கிற,

தஸ்யைவ பகவதோ நாராயணஸ்ய — அந்த எம்பெருமானுடையவே,

ஸ்ரீமத் சரணாரவிந்தயுகளம் — திருவடித் தாமரை யிணையை;

அநந்யாத்மஸம்ஜீவநேந தத்கத ஸர்வபாவேந — ஆத்மோஜ்ஜீவனம் இஃதொழிய வேறொன்றில்லை யென்றிருக்கிற ஐகாந்திகமான நினைவோடே,

சரணம் அநுவ்ரஜேத் — புருஷார்த்தத்துக்கு ஸாதனம் இவனே யென்று அத்யவஸாயங் கொள்ளக் கடவனென்றபடி. (க)

இப்படி ஒருகால் சரணம் புகுந்து விடுமித்தனையோ வென்னில், பேற்றுக்கு ஒருகால் அமைந்திருந்தாலும் காலக்ஷேபத்திற்கும் இனிமையாலே விடவொண்ணாமைக்குமாக இவ்வத்யவஸாயம் நாள்தோறும் இடையறாது செல்லவேணு மென்கிறது மேல் —

(மூலம்) ததஸ்ச ப்ரத்யஹம் ஆத்மோஜ்ஜீவநாய
ஏவம் அநுஸ்மரேத் ॥ 2 ॥

2. ததச்ச ப்ரத்யஹம் ஆத்மோஜ்ஜீவநாய ஏவம் அநுஸ்மரேத் — பிற்பாடும் நாடோறும் தன்னை உஜ்ஜீவனம் செய்துகொள்வதற்காக இங்ஙனே அநுஸ்யூதமாக ஸ்மரிக்க வேண்டும். [அது மேலே சொல்லுகிறது.] (2)

(மூலம்) அதுகூலம் விஸ்வ ... ப்ராணம் த ... ணி
தோத்ரம் அ.........................யா அசாநः ப்ராணத்ய குதாநம்
ஹரவதே நிவேதயேத் ॥ 4 ॥

(குறிப்பு :— இது மிகப் பெரிய சூர்ணை ; முன்னமே சேர்க்கப்பட்டிருக்கிற மூலத்திலும், மேலே விவரணத்தில் காட்டுகிற ப்ரதீகங்களிலும் பூர்த்தியான சூர்ணையை அநுஸந்திப்பது. இந்த சூர்ணையில் விசேஷண பதங்களும் விசேஷ்ய பதங்களும் பலபல வருகின்றன. ஆங்காங்குள்ள விசேஷணங்கள் எந்த விசேஷ்யத்தில் முடிவு பெறுகின்றன வென்பது சிறிது சிரமப்

பட்டே அறியவேண்டியதாகும். அதற்கு அநுகூலமாக ஆங் காங்கு நாம் கீழே குறிப்பிட்டுள்ள ரேகையினால் நன்கு தெளிவு பெறுக.)

3. சதுர்தச புவநாத்மகம் அண்டம் தசகுணிதோத் தரஞ் ச ஆவரணஸப்தகம் ஸமஸ்தம் கார்ய காரண ஜாத மதீத்ய —*பதினான்கு லோகங்கள் மலிந்த அண்டத்தையும், மேன்மேலும் பதின் மடங்கு அதிகமாயிருக்கிற ஸப்தாவ ரணங்களையும் மற்றுமுள்ள ஸமஸ்த கார்யகாரணவர்க்கங் களையும் கடந்து அப்பால் விளங்குகின்ற,*

பரமவ்யோமசப்தாபிதேயே — *பரமாகாச மென்னுஞ் சொல்லால் சொல்லப்படுகிற,*

ப்ரஹ்மாதீநாம் வாங்மநஸ அகோசரே — *பிர மன் முதலானாருடைய‍வும் வாக்குக்கும் நெஞ்சுக்கும் எட்டாத,*

**ஸ்ரீமதி வைகுண்டே திவ்ய லோகே** — *ஸ்ரீ வைகுண்ட திவ்ய லோகத்தில்,*

**ஸநக விதி சிவாதிபிரபி அசிந்த்யஸ்வபாவ ஐச்வர்யை: நித்யஸித்தை: அநந்தை: பகவதாநுகூல்யைக போகை: திவ்ய புருஷை: மஹாத்மபி: ஆபூரிதே**

*(ப்ரஹ்மபாவனையில் தலை நின்ற) ஸநகாதிகளுக்கும் (கர்மபாவனையில்தலை நின்ற) ப்ரஹ்ம ருத்ராதிகளுக்கும் நினைக்கவொண்ணாதபடியான ப்ரகாரவைபவங்களை யுடையராய் எப்போதும் பகவதநுபவநிரதராய் எண்ணிறந்தவர்களாய் எம்பெரு மான்பக்கலில் பரிவேவடிவெடுத்தவர்களாய் பூமியில் கால் பாவாதவர்களான மஹாத்மாக்களினால் மிடைந்ததாய்,*

**தேஷாமபி இயத் பரிமாணம் இயதைச்வர்யம் ஈத்ருச ஸ்வபாவமிதி பரிச்சேத்தும் அயோக்யே**

அந்த மஹாத்மாக்களுக்கும் அளவிட வொண்ணாத பரிமாண மென்ன ஐச்வர்ய மென்ன ஸ்வபாவ மென்ன இவற்றை யுடைத்தாய்,

**திவ்ய ஆவரண சத ஸஹஸ்ர ஆவ்ருதே**

லோகவிலக்ஷணமான ஆயிரந் திருமதிள்களை யுடைத்தாய்,

**திவ்ய கல்பகதரு உபசோபிதே**

அப்ராக்ருதமான கற்பகச் சோலையாலே போக்யமாய்,

**திவ்யோத்யாந சத ஸஹஸ்ர கோடிபி: ஆவ்ருதே**

அனேகமாயிரம் திருத் தோப்புக்களாலே சூழப் பட்டதாய்

**அதிப்ரமாணே திவ்ய ஆயதநே**

அகலமும் நீளமும் அளவிட வொண்ணாததான திருக் கோயிலிலே

**கஸ்மிர்ச்சித் விசித்ர திவ்ய ரத்நமய திவ்ய ஆஸ்தாந மண்டபே**

பலவகைப்பட்ட திவ்ய ரத்னங்களாலே ப்ரசுரமாயிருப்பதான வொரு திருவோலக்க மண்டபத்திலே

**திவ்ய ரத்நஸ்தம்ப சத ஸஹஸ்ர கோடிபி: உபசோபிதே**

அனேகமாயிரம் மாணிக்கத் தூண்களாலே விளக்கமுற்றதாய்

**திவ்ய நாநா ரத்ந க்ருத ஸ்தல விசித்ரிதே**

அப்ராக்ருதமான பலவகைப்பட்ட மாணிக்கங்கள் செறிந்த தரையை யுடைத்தாய்

| | |
|---|---|
| திவ்ய அலங்கார அலங்க்ருதே | (மேல்கட்டி திருத்திரை முதலான) திவ்யாலங்காரங்களினாலழகுபெற்றதாய், |
| பரித: பதிதை: பதமானை: பாதபஸ்தைச் ச நாநா கந்த வர்ணை: திவ்ய புஷ்பை: சோபமானை: திவ்ய புஷ்ப உபவனை: உபசோபிதே— | சுற்றிலும் உதிர்ந்தவைகளும் உதிர்ந்து கொண்டிருப்பவைகளும் மரங்களிலே நிற்பவைகளும் பலவகைப்பட்ட பரிமளத்தையும் நிறத்தையு முடையவைகளுமான திவ்ய புஷ்பங்களாலே விளங்கா நின்ற பைம்பூஞ் சோலைகளாலே சோபிதமாய், |
| § ஸங்கீர்ண பாரிஜாதாதி கல்ப த்ரும உபசோபிதை: | ஒன்றோடொன்று கலசியிருக்கிற பாரிஜாதம் முதலான கல்ப விருக்ஷங்களினால் விளங்கிக் கொண்டிருப்பவைகளும், |
| அஸங்கீர்ணைச் ச கைச் சித் | ஒன்றோ டொன்று சேர்ந்திராத சில |
| அந்தஸ் ஸ்த புஷ்பரத்நாதி நிர்மித திவ்ய லீலா மண்டப | உள்ளே யிருக்கின்ற—புஷ்பம் ரத்னம் முதலியவற்றால் அமைக்கப்பட்ட |

§ இது முதலான த்ருதீயாந்த விசேஷணங்களுக்கு விசேஷ்யம்—திவ்யோத்யாந சதஸஹஸ்ரை: என்பது.

| | |
|---|---|
| சத ஸஹஸ்ரோப சோபிதை: | அனேகமாயிரம் திவ்யலீலா மண்டபங்களினால் விளங்கிக்கொண்டிருப்பவைகளும் |
| ஸர்வதா அநுபூயமாநை ரபி அபூர்வவத் ஆச்சர்யம் ஆவஹத்பி : | எப்போது மநுபவிக்கப்படா நிற்கவும் அபூர்வ வஸ்துபோலே ஆச்சர்யத்தை விளைப்பவைகளும், |
| க்ரீடாசைலசதஸஹஸ்ரை ரலங்க்ருதை: | அனேகமாயிரம் விளையாட்டுக் குன்றுகளாலே அலங்கரிக்கப் பட்டவைகளும் |
| கைச்சித் நாராயணதிவ்யலீலா அஸாதாரணை: கைச்சித் பத்மவநாலயாதிவ்யலீலா அஸாதாரணை: ஸாதாரணைச் ச கைச்சித் கோமலகூஜிதை: சுகசாரிகாமயூரகோகிலாதிபி: ஆகுலை: திவ்யோத்யாந சதஸஹஸ்ரை: ஆவ்ருதே | எம்பெருமானுடைலீலைக்கே உரியவைகள் சிலவும், பிராட்டியாருடைய லீலைக்கே உரியவைகள் சிலவும், இருவருடைய லீலைக்கு முரியவைகள் சிலவுமாய் அழகிய குரலையுடையகிளிகள் பூவைகள் மயில்கள்குயில்கள் முதலான பறவைகளின் கோலாஹலம்பொருந்திய திவ்யமான நூறாயிரம் பொழில்களாலே சூழப்பட்டதாய், |
| § மணிமுக்தாப்ரவாலக்ருத ஸோபாநை: | ரத்னம் முத்து பவளம் முதலியவற்றால் செய்யப்பட்ட படிகளை யுடையனவாய், |

§ இது முதலான த்ருதீயாந்த விசேஷணங்களுக்கு விசேஷ்யம்—‘ திவ்ய ஸௌகந்திக வாபீசதஸஹஸ்ரை: ’ என்பது.

| | |
|---|---|
| திவ்ய அமல அம்ருத ரஸோதகை: | அப்ராக்ருதமும் நிர்மலமும் அம்ருதம்போலே ரஸவத்துமான நீர்ப்பரப்பை யுடையனவாய் |
| அதிரமணீய தர்சநை: அதி மநோஹர மதுர ஸ்வரை: திவ்யாண்டஜவரை: ஆகுலை: | கண்ணுக் கழகியவைகளும் பேச்சிலினிமை யுடையவைகளுமான அப்ராக்ருத பக்ஷிகளாலே வ்யாப்தங்களாய், |
| அந்தஸ்ஸ்த முக்தாமய திவ்ய க்ரீடாஸ்தாந உபசோபிதை: | உள்ளேயுண்டான—முத்துக்களாலான லீலாஸ்தானங்களாலே சோபிதங்களாய், |
| திவ்யராஜ ஹம்ஸாவளீ விராஜிதை: | சுத்த ஸத்வமயமான ராஜ ஹம்ஸங்கள் விளங்கிக் கொண்டிருப்பவைகளான |
| திவ்ய ஸௌகந்திகவாபீ சத ஸஹஸ்ரை: ஆவ்ருதே | அப்ராக்ருதமான செங்கழுநீரோடைகள் பலவாயிரம் நிறைந்துள்ளதாய், |
| நிரஸ்தாதிசய ஆநந்தைகரஸதயா ச ஆநந்த்யாச்ச ப்ரவிஷ்டாந் உந்மாதயத்பி: க்ரீடோத்தேசை: விராஜிதே | உயர்வறவுயர்ந்த ஆனந்தமே வடிவெடுத்திருக்கையாலும் அபரிச்சிந்நமாயிருக்கையாலும் உள்புக்கவர்களை மயக்கவல்ல லீலாஸ்தானங்களாலே விளங்காநிற்பதாய், |
| தத்ர தத்ர க்ருத திவ்ய புஷ்ப பர்யங்க உபசோபிதே | அவ்வவ்விடங்களிலே பண்ணப்பட்ட பூம் பள்ளிகள் விளங்கா நிற்பதாய், |

**நாநாபுஷ்ப ஆஸவ ஆஸ்வாத மத்த ப்ருங்க ஆவலீபி: உத்கீயமாந திவ்ய காந்தர்வேண ஆபூரிதே**

பலவகைப்பட்ட புஷ்பங்களிலுண்டான மதுவைப் பருகிக் களித்த வண்டுத்திரள்கள் பாடும் திவ்ய ஸங்கீதம் நிறைந்ததாய்,

**சந்தந அகரு கர்ப்பூர திவ்ய புஷ்ப அவகாஹி மந்தாநில ஆஸேவ்யமாநே**

சந்தனம் அகில் பச்சைக் கருப்பூரம் திவ்ய புஷ்பங்கள் ஆகிய இவற்றினுட் புகுந்து அங்குள்ள பரிமளங்களைக் கொய்து கொண்டு வருற மந்த மாருதம்வீசப் பெற்றதாய்

**மத்யே திவ்யபுஷ்பஸஞ்சய விசித்ரிதே**

இடையில் விடுபூக்களாலே சித்திரிக்கப்பட்டதான

**மஹதி திவ்ய யோக பர்யங்கே**

பெரிய திருப்பள்ளிக் கட்டிலிலே

---

**அநந்தபோகிநி**

திருவனந்தாழ்வான் மீது,

**ஸ்ரீமத் வைகுண்டைச்வர்யாதி திவ்யலோகம் ஆத்மகாந்த்யா விச்வம் ஆப்யாயயந்த்யா**

ஸ்ரீ வைகுண்டச் செல்வம் முதலிய திவ்யலோகம் முழுவதையும் தனது ஒளியினுல் விளங்கச்செய்து மகிழ்விப்பவளும்

**சேஷசேஷாசநாதிஸர்வபரிஜநம் பகவத: தத்ததவஸ்தோசிதபரிசர்யாயாம் ஆஜ்ஞாபயந்த்யா**

திருவனந்தாழ்வான் ஸேநாபதி யாழ்வான் முதலான ஸகலபரிஜநத்தையும் எம்பெருமானது அந்தந்த அவஸ்தைகளுக்குரிய கைங்கரியத்தில் நியமிப்பவளும்

| | |
|---|---|
| சீல ரூப குண விலாஸாதிபி: ஆத்மாநுரூபயா | சீலம் வடிவு குணம் ச்ருங்கார விலாஸம் முதலியவற்றால் தனக்கு ஏற்றவளுமான |
| ச்ரியா ஸஹ | பிராட்டியோடுகூட |
| ஆஸீநம் | வீற்றிருந்தருள்பவனும் |
| ப்ரத்யக்ர உந்மீலித ஸரஸிஜ ஸத்ருச நயந யுகளம் | அப்போதலர்ந்த செந்தாமரைப் பூப்போன்ற திருக்கண்களை யுடையவனும் |
| ஸ்வச்ச நீல ஜீமூத ஸங்காசம் | விமலமான கார்முகில் போன்றவனும் |
| அத்யுஜ்ஜ்வல பீத வாஸஸம் | மிகவும்புகர் பெற்றுவிளங்குகின்ற பீதக வாடையை யுடையவனும் |
| அதிநிர்மலயா அதிசீதலயா [அதிகோமலயா] ஸ்வச்சயா மாணிக்யாபயா ஸ்வயா ப்ரபயா க்ருத்ஸ்நம் ஜகத் பாஸயந்தம் | மிக நிர்மலமாய் மிகக் குளிர்ந்ததாய் [மிகவும் ஸுகுமாரமாய்] ஸ்வச்சமாய் மாணிக்கம்போன்றதான தனது திவ்ய காந்தியினால் உலகம் முழுவதையும் விளங்கச் செய்யா நின்றவனும் |
| அசிந்த்ய திவ்ய அத்புத நித்ய யௌவந ஸ்வபாவலாவண்ய மய அம்ருத ஸாகரம் | சிந்தைக்கு எட்டாததாய் திவ்யமாய் ஆச்சரியமாய் நித்யமாயிருக்கிற யௌவனத்தை ஸ்வபாவமாகவுடைய லாவண்யம் நிறைந்த அமுதக் கடலாய் |

| | |
|---|---|
| அதிஸௌகுமார்யாத் ஈஷத்ப்ரஸ்வின்னவத் ஆலக்ஷ்யமாண லலாடபலக திவ்யாலக ஆவலீ விராஜிதம் | மிகவும் ஸுகுமார மாதலால் சிறிது குறு வெயர்ப்பு அரும்பினாற்போலே காண்கிற திருநெற்றியிற் படிந்த திருக்குழல்களாலே விளங்கா நிற்பவனாய் |
| ப்ரபுத்த முக்தாம்புஜ சாரு லோசனம் | அப்போ தலர்ந்த தாமரைப் பூப் போன்று அழகிய திருக்கண்களை யுடையனாய் |
| ஸவிப்ரம ப்ரூலதம் | விலாஸத்தோடு கூடிக் கொடி போன்றதான திருப் புருவங்களையுடையனாய் |
| உஜ்ஜ்வல அதரம் | பிரகாசிக்கின்ற திருவதரத்தை யுடையனாய் |
| சுசி ஸ்மிதம் | கபடமற்ற புன்சிரிப்பை யுடையனாய் |
| கோமல கண்டம் | அழகிய கபோலங்களையுடை னாய் |
| உந்நஸம் | உயர்ந்த திரு மூக்கைபுடையனாய் |
| உதக்ர பீந அம்ஸ விலம்பி குண்டல அலகாவலீ பந்துர கம்பு கந்தரம் | உயர்ந்தும்பருத்து மிருக்கிற திருத்தோள்கள் வரையில் தொங்குகின்ற திருக் குண்டலங்களாலும் திருக்குழல் கற்றைகளாலும் அழகு பெற்றுச் சங்கு போல் விளங்குகின்ற திருக்கழுத்தை யுடையவனாய் |

பிராட்டிமார்களுக்குக் கர்ணாலங்காரமான கரு நெய்தல் மலரென்ன கர்ணபூஷணங்களென்ன அலைந்த திருக்குழல் கற்றையென்ன ஆகிய இவை அழுந்தியிருக்கிறபடியைத் தெரிவிக்கின்றவையாகித் திருமுழந்தாள் வரை தொங்குகின்ற நான்கு புஜங்களோடே ப்ரகாசிக்கின்றவனாய்

**ப்ரியா அவதம்ஸ உத்பலகர்ண பூஷண ச்லத அலகாபந்த விமர்த சம்ஸிபி: ஆஜாநு விலம்பிபி: சதுர்ப்பி: புஜை: விராஜிதம்**

**அதிகோமல திவ்யரேகா அலங்க்ருத ஆதாம்ர கரதலம்** — மிகவுமழகிய (தாமரை சங்கு சக்கரம் முதலான) ரேகைகளினால் அலங்கரிக்கப் பட்டுச் சிறிது சிவந்திருக்கிற திருக்கைத் தலத்தை யுடையனாய்

**திவ்ய அங்குலீயக விராஜிதம்** — அப்ராக்ருதமான மோதிரங்களினால் விளங்குபவனாய்

**§ அதிகோமல திவ்ய நகாவலீ விராஜித அதிரக்தாங்குலீபி: அலங்க்ருதம்** — மிகவும் ஸுகுமாரமான திருநகங்களால் விளங்குகின்ற மிகச் சிவந்த திருவிரல்களால் அலங்கரிக்கப் பட்டவனாய்

---

§ "அதி கோமல திவ்யநகாவலீ விராஜிதம்" என்று இடையிலே பிரித்து எம்பெருமானுக்குத் தனி விசேஷணமாக்குவதுமுண்டு. அநுரக்த, அதிரக்த என்பன பாடபேதங்கள்; பொருள் ஒன்றே.

**தத்க்ஷண உந்மீலித புண்டரீக ஸத்ருச சரண யுகலம்**

அப்போதலர்ந்த புண்டரீகத்தோடொத்த திருவடியிணையை யுடையவனாய்

**அத்யந்தஸௌகஸ்பர்சை: திவ்யகந்தை: அதிமநோஹர கிரீட மகுட சூடாவதம்ஸ மகரகுண்டல க்ரைவேயகஹார கேயூர கடக ஸ்ரீவத்ஸ கௌஸ்துப முக்தாதாம உதரபந்தந பீதாம்பர காஞ்சீ குண நூபுராதிபி: பூஷணை: பூஷிதம்**

மிகவும் ஸௌகமான ஸ்பர்சத்தை யுடையவைகளும் திவ்யமான பரிமளத்தை யுடையவைகளுமான மிக வழகிய கிரீடம்.........நூபுரம் முதலான திவ்ய பூஷணங்களினால் பூஷிதனாய் (சரணாகதி கத்யத்தில் விரிவுரை காண்க).

**ஸ்ரீமத்யா வைஜயந்த்யா வநமாலயா விராஜிதம்**

அழகிய வைஜயந்தி யென்னும் வனமாலையினால் விளங்குபவனாய்

**சங்க சக்ர கதா அஸி சார்ங்காதி திவ்யாயுதை: ஸேவ்யமாநம்**

பஞ்சாயுதாழ்வார்கள் முதலான திவ்யாயுதங்களாலே ஸேவிக்கப்பட்டவனாய்

**ஸ்வஸங்கல்ப மாத்ர அவக்லுப்த ஜகத் ஜந்ம ஸ்திதி த்வம்ஸாதிகே ஸ்ரீமதி விஷ்வக்ஸேநே ந்யஸ்தஸமஸ்த ஆத்மைச்வர்யம்**

நினைத்த மாத்திரத்திலே ஸகல ஜகத்தினுடையவும் ஸ்ருஷ்டிஸ்திதி ஸம்ஹாராதிகளை நிர்வஹிக்கவல்ல ஸேநாபதி யாழ்வான்பக்கலிலே தன்னுடைய நியமனச் செல்வ மெல்லாம் ஒப்படைத் திருப்பவனாய்

[வைநதேயாதிபிரித்யாதி.]

ஸ்வபாவதோ நிரஸ்த ஸமஸ்த ஸாம்ஸாரிக ஸ்வபாவை: பகவத் பரிசர்யாகரண யோக்யை: பகவத் பரிசர்யைக போகை: வைநதேயாதிபி: அநந்தை: நித்யஸித்தை: யதாயோகம் ஸேவ்யமாநம்

இயற்கையாகவே ஸாம்ஸாரிக ஸ்வபாவ மொன்று மில்லாதவர்களும் எம்பெருமானுக்குத் தொண்டு பூண்டிருப்பவர்களும் அந்த கைங்கர்யத்தையே நித்யபோகமாக வுடையவர்களுமான பெரிய திருவடி முதலான எண்ணிறந்த நித்யஸூரிகளாலே முறைமைப்படி ஸேவிக்கப் படுபவனாய்,

§ ஆத்ம போகேந அநநுஸம்ஹித பராதிகாலம்

ஸ்வாத்மாநுபவத்தினால் அளவிறந்த காலம் கடந்தமையும் அறியகில்லாதவனாய்,

---

§ "ஆத்மபோகேந என்னுமிவ்விடத்தில் ஆச்சான் பிள்ளையின் பாடம் வேறுவிதமாக இருக்கும்போல் காண்கிறது. "இக் கடாக்ஷம் பரார்த்தமாக வன்றிக்கே காலதத்வ முள்ளதனையும் ஸ்வப்ரயோஜநமாக வநுஸந்திக்கப்பட்டு விலக்ஷணமாய் அபராதங்களை நினைத்துக் கலங்குகை யன்றிக்கே ஸுப்ரஸந்ந ஸுந்தரமான கடாக்ஷத்தாலே" என்று ஆச்சான் பிள்ளை வியாக்கியான ஸ்ரீ ஸூக்தி காண்கிறபடியால் "அநநுஸம்ஹித" என்கிற ஸ்தானத்தில் "அநுஸம்ஹித" என்கிற பாடமும் "பராதிகாலம்" என்று தனிப்படவன்றிக்கே [பகவத் விசேஷணமாக வல்லாமல்] ஸமஸ்த பதமாய் அவலோகநவிசேஷணமாகக் கொள்ளுகிற பாடமும் தோன்றுகிறது. பல ஸ்ரீகோசங்களிலும் பெரியார்களுடைய அநுஸந்தான பரம்பரைகளிலும் காண்கிற பாடம் இங்கு நிவேசிக்கப்பட்டது. ஆத்மபோக மாவது—*ப்ரசாந்தாநந்தாத்மாநுபவஜ* இத்யாதி வரதராஜஸ்தவ ஸூக்தியில் ப்ரஸ்தாவிக்கப்பட்ட பரமபதநாதனுக்குண்டான ஸ்வாத்மாநுபவம்; பிரமனுடைய ஆயுஷ் காலத்திற்கு 'பரம்' என்று பெயர்; அப்படிப்பட்ட மிகப் பெரிய கால பரிமாணமும் தெரியாமல் செல்லுகிறதாம் ஸ்வாத்மாநுபவத்தில். "க்ஷணுவத் க்ஷிப்த பராதிகாலயா" என்ற ஸ்தோத்ரரத்ந ஸூக்தியும் காண்க.

திவ்ய அமல கோமல அவலோகநேந விச்வம் ஆஹ்லாதயந்தம்

*திவ்யமாய் நிர்மலமாய் ஸௌந்தரமான கடாக்ஷவீக்ஷணத்தினால் ஸமஸ்தவஸ்துக்களையும் உகப்பிக்கக் கடவனாய்,*

ஈஷதுந்மீலித முகாம்புஜ உதர விநிர்கதேந திவ்யாநநாரவிந்த சோபா ஜநநேந திவ்யகாம்பீர்ய ஔதார்ய ஸௌந்தர்ய மாதுர்யாதி அநவதிக குண கண விபூஷிதேந அதிமநோஹர திவ்யபாவகர்ப்பேண திவ்ய லீலாலாப அம்ருதேந அகில ஜநஹ்ருதயாந்தராணி ஆபூரயந்தம் பகவந்தம் நாராயணம்

*சிறிதலர்ந்த திருமுகத்தாமரையிடையில் நின்று முண்டானதாய்த் திருப்பவளத்துக்கு ஆபரணம் சாத்தினாற்போலே அழகையுண்டாக்கக் கடவதாய் திவ்யமான காம்பீர்யம் ஔதார்யம் மாதுர்யம் முதலான எண்ணிறந்த குணத்திரள்களாலே அலங்க்ருதமாய் அதிமநோஹரமான அபிப்ராய விசேஷத்தை உள்ளேயுடைத்தான திவ்யமான ஸல்லாபமாகிற அமுதத்தினால் எல்லாருடையவும் ஹ்ருதயாவகாசங்களையும் நிரப்புமவனான பகவந்நாராயணனை*

த்யாநயோகேந த்ருஷ்ட்வா

*ஸாக்ஷாத்கரித்து*

(தத:) பகவத: நித்ய ஸ்வாம்யம் ஆத்மந: நித்யதாஸ்யம்ச யதாவஸ்திதம் அநுஸந்தாய

*(பிறகு) அப்பெருமானுக்கு இயற்கையாயுள்ள சேஷித்வத்தையும் தனக்கு இயற்கையாயுள்ள சேஷத்வத்தையும் உள்ளபடி யநுஸந்தித்து*

கதா அஹம் பகவந்தம் நாரா யணம் மம குலநாதம் மம குல தைவதம் மம குலதநம் மம போக்யம் மம மாதரம் மம பிதரம் மம ஸர்வம் ஸாக்ஷாத் கரவாணி சக்ஷுஷா

என் குலநாதனை என் குல தைவமாய் என் குலச் செல்வமாய் எனக்குப் பரம போக்யனாய் எனக்குத் தாயாய்த் தந்தையாய் எல்லாமுமான பகவந் நாராயணனை நானெப்போது கண்ணாரக் காண்பேன்? (என்றும்)

கதா அஹம் பகவத் பாதாம் புஜ த்வயம் சிரஸா ஸங்க்ர ஹீஷ்யாமி ['தாரயிஷ்யாமி']

எம்பெருமானது திருவடித் தாமரை யிணையை எப்போது நான் தலையால் தாங்கப் போகிறேன்? (என்றும்).

கதா அஹம் பகவத் பாதாம் புஜ த்வய பரிசர்யாசயா நிரஸ்த ஸமஸ்தேதர போகாச: அபகத ஸமஸ்த ஸாம்ஸாரிக ஸ்வபாவ: தத்பாதாம்புஜ த்வயம் ப்ரவேக்ஷ்யாமி

எம்பெருமான் திருவடித் தாமரை யிணையில் கைங்கர்ய ருசியாலே விஷயாந்தரங்க ளெல்லா வற்றிலும் காதல் கழிந்தவனாய் (ராகத்வேஷாதிகளாகிற) ஸமஸ்த ஸாம்ஸாரிக ஸ்வபாவங்களும் அகன்றவனாய் அடியே னெப்போது அடியிணையைக்கிட்டுவேன்? (என்றும்)

கதா அஹம் பகவத் பாதாம் புஜத்வய பரிசர்யா கரண யோக்ய: ததேக போக: தத்பா தௌ பரிசரிஷ்யாமி

(இந்த வாக்யத்திற்குப் பிறகு முன்வாக்யம் சொல்லுகிற பாடமுமுண்டு.)

என்றைக்கு அடியேன் அத்திருவடி யிணைகளில் அடிமை செய்ய உரியவனாய் அவ்வடிமையில் உருசி கண்டவனாய் அத்திருவடிகளில் தொண்டு பூண்பேன்? (என்றும்)

| | |
|---|---|
| கதா மாம் பகவாந் ஸ்வகீயயா அதிசீதலயா த்ருசா அவலோக்ய ஸ்நிக்த கம்பீர மதுரயா கிரா பரிசர்யாயாம் ஆஜ்ஞாபயிஷ்யதி இதி | அப்பெருமான் தனதுமிகக் குளிர்ந்த திருக் கண்களாலே கடாக்ஷித்து முழங்கி இனிதான பேச்சாலே (* முகப்பே கூவிப் பணி கொள்ளாயென்கிற படியே) கைங்கர்யத்திலென்னை ஏவப் புகுகிறது எப்போதோவென்றும் (ஆக இப்படியெல்லாம் மனோரதித்து) |
| பகவத் பரிசர்யாயாம் ஆசாம் வர்த்தயித்வா | எம்பெருமானுடைய கைங்கர்யத்திலே ஆசையைப் பெருக்கி |
| தத்ப்ரஸாத உபப்ரும்ஹிதயா தயைவ ஆசயா | அப்பெருமானுடைய அநுக்ரஹத்தினால் பெருகிச் செல்லுமந்த ஆசையோடே |
| பகவந்தம் உபேத்ய— | எம்பெருமானைக் கிட்டி |
| சேஷ போகே ச்ரியா ஸஹ ஆஸீநம் வைநதேயாதிபி: ஸேவ்யமாநம் பகவந்தம் 'ஸமஸ்தபரிவாராய ஸ்ரீமதே நாராயணாய நம:' இதி தூராத் ஏவ ப்ரணம்ய | திருவனந்தாழ்வான் மடியிலே பெரிய பிராட்டியாரோடே கூட விருப்பவனைப் பெரிய திருவடி முதலான நித்ய ஸூரிகளாலே ஸேவிதனாயிருக்கிற அப்பெருமானை, 'ஸமஸ்த பரிவார ஸமேதனான ஸ்ரீமந் நாராயணனுக்கு நம:' என்று சொல்லி நெடுந்தூரத்தில் நின்றுமே தெண்டனிட்டு |

உத்தாய உத்தாய புந:புந: ப்ரணம்ய — (காலால் நடந்து செல்லு கையன்றிக்கே) ப்ரணமபரம்பரைகளினாலேயே சென்று,

அத்யந்த ஸாத்வஸ விநயாவநத: பூத்வா — மிகவும் கூச்சத்தோடும் விநயத்தோடும் வணங்கி நின்று,

பகவத் பாரிஷத கணநாயகை: த்வாரபாலை: க்ருபயா ஸ்நேஹ கர்ப்பயா த்ருசா அவலோகித: — எம்பெருமானது திருவோலக்கத்தவர்கள் கணநாதர்கள் திருவாசல் காப்பார் ஆகிய இவர்களாலே க்ருபையோடு அன்புததும்பக் கடாக்ஷிக்கப் பெற்றவனாய்

ஸம்யக் அபிவந்திதை: தைஸ் தைரேவ அநுஜ்ஞாத: — நன்கு தெண்டனிடப்பட்ட அவ்வவர்களாலே அநுமதி பண்ணப் பெற்றவனாய்

பகவந்தம் உபேத்ய ஸ்ரீமதா மூலமந்த்ரேண — ஸ்ரீவைகுண்டநாதனையணுகி திருவஷ்டாக்ஷரமஹா மந்த்ரத்தைக் கொண்டு

'மாம் ஐகாந்திக ஆத்யந்திக பரிசர்யாகரணாய பரிக்ருஹ்ணீஷ்வ' இதி யாசமாந: ப்ரணம்ய — 'அடியேனை அநந்யநித்ய கைங்கர்யத்திற்குக் கைக்கொண்டருள வேணும்' என்று யாசிப்பவனாய்த் தெண்டனிட்டு

ஆத்மாநம் பகவதே நிவேதயேத் — தன்னை அப்பெருமானுக்கு ஸமர்ப்பிக்கக் கடவன். (4)

(மூலம்) ததோ ப⁴க³வதா ஸ்வயமேவ ஆத்மஸஞ்ஜீவநேந அம்ருதமயேந அவலோகநேந அவலோக்ய ஸர்வதே³ஶ ஸர்வகால ஸர்வாவஸ்தோ²சித அத்யந்த ஶேஷபா⁴வாய ஸ்வீக்ருத: அநுஜ்ஞாதஶ்ச அத்யந்த ஸாத்⁴வஸ விநயாவநத: கிங்குர்வாண: க்ருதாஞ்ஜலிபுட: ப⁴க³வந்தமுபாஸீத ॥ (5)

[ததோ பகவதா ஸ்வயமேவ ஆத்மஸஞ்ஜீவநேந அமர்யாத சீலவதா அதிப்ரேமாந்விதேந அவலோகநேந அவலோக்ய ஸர்வ தேச ஸர்வகால ஸர்வாவஸ்தோசிதாத்யந்த சேஷபாவாய ஸ்வீக்ருத: அநுஜ்ஞாதச் ச அத்யந்த ஸாத்வஸ விநயாவநத: கிங்குர்வாண: க்ருதாஞ்ஜலிபுட: பகவந்தம் உபாஸீத.] (5)

ததः— ஆத்மஸமர்ப்பணானந்தரம்

பகவதா ஸ்வயமேவ— எம்பெருமான் தானாகவே,

ஆத்மஸஞ்ஜீவநேந அமர்யாத சீலவதா அதிப்ரேமாந்விதேந அவலோகநேந அவலோக்ய — ஆத்ம ஸமுஜ்ஜீவநஹேது வாய் அளவுகடந்த சீல குணத்தைக் காட்டுமதாய் மிகவன்போடு கூடியதான கடாக்ஷத்தினால் நோக்கி

ஸர்வதேச ஸர்வகால ஸர்வாவஸ்தோசித அத்யந்தசேஷபாவாய ஸ்வீக்ருத: — *ஒழிவில்கால மெல்லாமுடனாய் மன்னி வழுவிலா வடிமை செய்யுமாறு ஸ்வீகரிக்க, அப்பேறுபெற்றவனாகி,

அநுஜ்ஞாதச் ச — "ஏவ மற்றமரராட்செய்வார்" என்கிற படியே ஏவவும் பெற்றவனாகி

அத்யந்த ஸாத்வஸ விநய அவநத: கிங்குர்வாண: க்ருதாஞ்சலிபுட: பகவந்தம் உபாஸீத — மிகவும் அச்சத்தாலும் ஒடுக்கத்தாலும் தலைசாய்த்துப் பணிவிடைக் காரனாயிருந்து கொண்டு கூப்பிய கையனாய் அப்பெருமானை அநுவர்த்தித் திருப்பான். (5)

(மூலம்) ததஶ்சாநுபூயமாந பாவவிஶேஷ: நிரதிஶயப்ரீத்யா அந்யத் கிஞ்சித் கர்த்தும் த்ரஷ்டும் ஸ்மர்த்தும் அஶக்த: புநரபி ஶேஷபாவமேவ யாசமாந: பகவந்தமேவ அவிச்சிந்ந ஸ்ரோதோரூபேண அவலோகநேந அவலோகயந் ஆஸீத ॥ (6)

[ததச் ச அநுபூயமாந பாவவிசேஷ: நிரதிசயப்ரீத்யா அந்யத் கிஞ்சித் கர்த்தும் த்ரஷ்டும் ஸ்மர்த்தும் அசக்த: புநரபி சேஷபாவமேவ யாசமாந: பகவந்தமேவ அவிச்சிந்ந ஸ்ரோதோரூபேண அவலோகநேந அவலோகயந் ஆஸீத.] (6)

6. *பின்னையும் எம்பெருமானுடைய ஸ்வரூப ஸ்வபாவாதிகளை அநுபவியா நின்று கொண்டு அளவுகடந்த அன்பினால் வேறொன்றைப் பண்ணுதல் பார்த்தல் நினைத்தல் செய்யமாட்டாதானாய் (சேஷத்வம் பெற்றிருக்கச் செய்தேயும் அதின் இனிமையாலே இது நிலைநிற்கப் போகிறதோ வென்கிற அதிசங்கை கொண்டு) பின்னையும் இப்படிப்பட்ட சேஷவ்ருத்தி குலையாதே நிலைநிற்க வேணுமென்று வேண்டிக் கொண்டு ஸ்ரீ வைகுண்ட நாதனையே இடைவிடாத தாராரூபமான பார்வையாலே பார்த்துக் கொண்டிருக்கக் கடவன்.* ... ... (6)

(மூலம்) 𑌤𑌤𑍋 𑌭𑌗𑌵𑌤𑌾 𑌸𑍍𑌵𑌯𑌮𑍇𑌵𑌾𑌤𑍍𑌮𑌸𑌞𑍍𑌜𑍀𑌵𑌨𑍇𑌨𑌾𑌵𑌲𑍋𑌕𑌨𑍇𑌨𑌾𑌵𑌲𑍋𑌕𑍍𑌯 𑌸𑌸𑍍𑌮𑌿𑌤𑌮𑌾𑌹𑍂𑌯 𑌸𑌮𑌸𑍍𑌤𑌕𑍍𑌲𑍇𑌶𑌾𑌪𑌹𑌂 𑌨𑌿𑌰𑌤𑌿𑌶𑌯𑌸𑍁𑌖𑌾𑌵𑌹𑌮𑌾𑌤𑍍𑌮𑍀𑌯𑌂 𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍍𑌪𑌾𑌦𑌾𑌰𑌵𑌿𑌨𑍍𑌦𑌯𑍁𑌗𑌲𑌂 𑌶𑌿𑌰𑌸𑌿 𑌕𑍃𑌤𑌂 𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌵𑌾𑌮𑍃𑌤𑌸𑌾𑌗𑌰𑌾𑌨𑍍𑌤𑌰𑍍𑌨𑌿𑌮𑌗𑍍𑌨𑌸𑌰𑍍𑌵𑌾𑌵𑌯𑌵𑌃 𑌸𑍁𑌖𑌮𑌾𑌸𑍀𑌤. (7)

[ததோ பகவதா ஸ்வயமேவ ஆத்மஸஞ்ஜீவநே நாவலோகநேந அவலோக்ய ஸஸ்மிதமாஹூய ஸமஸ்தக்லேசாபஹம் நிரதிசய ஸுகாவஹம் ஆத்மீயம் ஸ்ரீமத் பாதாரவிந்தயுகலம் சிரஸி க்ருதம் த்யாத்வா அம்ருதஸாகராந்தர் நிமக்ந ஸர்வாவயவஸ் ஸுகமாஸீத.] (7)

7. *"அம்மான் ஆழிப்பிரானவன் எவ்விடத்தான் யானார்" என்று ஸ்வரூபத்தை நினைத்து அகல நிற்க, அப்பெருமான்தானே அழகிய திருக்கண் ணோக்கத்தாலே குளிரக் கடாக்ஷித்துப் புன்முறுவல் செய்து, இங்ஙனே வாராயென்று சோதிவாய் திறந்தழைத்து, ஸகலக்லேசங்களையும் போக்கக் கடவதாய் இனி யிதுக்கவ்வருகில்லை*

யென்னலாம்படியான ஆநந்தத்தைப் பண்ணக்கடவதான தனது திருவடித்தாமரை யிணையைத் தன் தலையிலே வைத்தருளினதாக த்யானம் பண்ணி "அறிவையென்னு மமுதவாறு தலைப்பற்றி வாய்க்கொண்டதே" என்கிறபடியே ஆனந்த வமுதக்கடலினுள்ளே ஸர்வாவயவங்களும் மூழ்கப்பெற்றவனாய்க் கொண்டு இனிதிருப்பான். (7)

## வியாக்கியான நிகமனம்.

ஸ்வரூபாநுரூபமான ப்ரபத்தியையே தஞ்சமாகக் கொண்டு ப்ராக்ருத மண்டலத்தை விட்டு நீங்கி அப்ராக்ருதமான தேசவிசேஷத்திலே சென்று ஸர்வாங்க ஸுந்தரனாய் ஸர்வாபரண பூஷிதனாய் திவ்யாயுத சோபிதனாய் நித்யஸூரி பரிஷந்நிஷேவிதனாயிருக்கிற ஸ்ரீவைகுண்டநாதனைக் கிட்டி கைங்கர்ய ப்ரார்த்தனையை முன்னிட்டுக்கொண்டு ஒழிவில்காலமெல்லா முடனாய் மன்னி வழுவிலாதபடி செய்யும் கைங்கரியங்களைப்பெற்று ஆநந்தவமுதக்கடலிலே மூழ்கியிருக்குமாற்றை இங்கிருக்கும் நாள்வரையில் பரமைகாந்தியானவன் நாடோறும் சிந்தனை செய்து கொண்டிருக்கக் கடவனென்று அருளிச்செய்து தலைக்கட்டினாராயிற்று. ... .... ... ...

எம்பெருமானாருளிச்செய்த ஸ்ரீ வைகுண்டகத்யம்
முற்றுப் பெற்றது.

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ காஞ்சீ ப்ரதிவாதி பயங்கரம்
அண்ணங்கராசாரியர் இயற்றிய
**கத்யபாவப்ரகாசிகை யென்னும் கத்யத்ரயவுரை**
முற்றிற்று.